# முருகன் திருவிளையாடல்கள்




ஸ்ரீ சுவாமி சிவானந்தா

இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்க வெளியீடு

# முருகன் திருவிளையாடல்கள்

அருளியது :

**ஸ்ரீ சுவாமி சிவானந்தா**

தமிழாக்கம் :

திரு. R. வரதராஜன், B. A, B. T.

**சிவானந்தா நூற்றுண்டு விழா வெளியீடு**





## தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

சிவானந்தா ஆஸ்ரமம்

இராசிபுரம் : : சேலம் ஜில்லா

விலை ] 1985 [ ரூ. 5—00

* O *

**Translation of :**

**"LORD SHANMUGA & HIS WORSHIP"**

**In Tamil**

* O *

*Printed out of the magnanimous donation of :*

SRI SWAMI SHANMUGANANDA

&

SRI SWAMI MURUGANANDA

OF RISHIKESH

and

A humble devotee of Gurudev

Printed at The Literary Press, Salem - 636 001.

## ஆசியுரை

நம் வாழ்க்கையில் ஒளியாகவும் வழிகாட்டியாகவும் விளங்கும் சத்குரு ஸ்ரீ சிவானந்தா அவர்களுக்கு வணக்கம்.

பல ஆண்டுகளாக எண்ணற்ற நூல்களை வெளியிட்டு குருமகராஜ் சுவாமி சிவானந்தா அவர்களின் புனிதமான ஞானயக்ஞப்பணியை இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் முறையாகவும், ஒழுங்காகவும், திட்டமிட்டும் நடத்தி வருகிறது. அதனால் தமிழ் நாட்டிலும் வெளிநாடுகளிலும் தமிழர்கள் வாழும் பகுதிகளில் இருக்கும் ஆயிரக்கணக்கான ஆன்மீக சாதகர்கள், அடியவர்களின் இல்லங்களில் சுவாமி சிவானந்தா அவர்களால் எழுதப்பட்ட வாழ்வில் மறுமலர்ச்சி உண்டாக்கும் நூல்களின் தமிழ் மொழிபெயர்ப்புக்கள் இன்று இருக்கின்றன.

இவ்வாண்டுக்கான ஞானயக்ஞத் தொடரில் 'முருகன் திருவிளையாடல்கள்' என்ற நூலை திரு. R. வரதராஜன், B. A., B. T. அவர்கள் மிக அற்புதமாக தமிழில் மொழி பெயர்த்துள்ளார்.

இந்நூலை மிகச் சிறந்த முறையில் சேலம் லிட்டரரி பிரஸ்ஸார் அச்சடித்துக் கொடுத்துள்ளனர்.

இப்பணிக்குத் தேவையான பொருளை வாரி வழங்கியவர்கள், இப்புனிதமான பணியைச் செய்த நல்ல ஆன்மாக்கள், இந்த ஆன்மீக போதனைகளைப் படிப்பவர்கள் ஆகிய அனைவருக்கும் எல்லாம் வல்ல இறைவன் தெய்வீக அருளைப் பொழிய வேண்டுமெனப் பிரார்த்தனை செய்கிறேன்.

Swami Chidananda
ॐ

# பொருளடக்கம்

| தலைப்புகள் | | பக்கம் |
|---|---|---|
| **பாகம் — 1** | | |
| 1. பிரார்த்தனை | ... | 1 |
| 2. கந்தன் வழிபாடு | ... | 5 |
| 3. அசுரர்களின் முற்பிறவி | ... | 9 |
| 4. கந்த மகா புராணத்தில் கூறப்பட்டுள்ள கார்த்திகேயனும், தாரகாசுரனும் | ... | 12 |
| **பாகம் — 2** | | |
| 1. ஸ்கந்த விஜயம் – முன்னுரை | ... | 17 |
| 2. தட்சன் வேள்வி | ... | 19 |
| 3. நந்தியின் சாபம் | ... | 24 |
| 4. அசுரர்களின் கொடுமை | ... | 29 |
| 5. பிறப்பும் இளமைப் பருவமும் | ... | 32 |
| 6. போர் மேகங்கள் | ... | 40 |
| 7. அசுரர்களின் அழிவு | ... | 44 |
| 8. சூரபத்மனின் வீழ்ச்சி | ... | 50 |

9. திருமணங்கள்

1. தெய்வயானை ... 53

2. வள்ளி ... 55

3. திருமணம் ... 56

## பாகம் — 3

கதையின் உட்கருத்து ... 60

## பாகம் — 4

முருகன் அடியவர்களான ஞானிகள்

1. நாரதர் ... 80

2. முசுகுந்த மன்னன் ... 80

3. சிவகவி ... 82

4. நக்கீரர் ... 82

5. கச்சியப்ப சிவாச்சாரியார் ... 86

6. பகழிக் கூத்தர் ... 86

7. முருகம்மையார் ... 88

8. அருணகிரிநாதர் ... 89

9. குமரகுருபர சுவாமிகள் ... 93

10. அழகுமுத்துப் புலவர் ... 94

## பாகம் 5

| | | | |
|---|---|---|---|
| | கந்தப்பெருமானின் மிக முக்கியமான திருப்பதிகள், தல மகிமை | — | 97 |
| 1. | திருப்பரங்குன்றம் | — | 98 |
| 2. | திருச்செந்தூர் | — | 99 |
| 3. | பழனிக்குன்று | — | 99 |
| 4. | சுவாமி மலை | ... | 101 |
| 5. | குன்று தோருடல் | ... | 102 |
| 6. | பழமுதிர்சோலை | ... | 102 |
| 7. | அசலேசுவரர் | — | 103 |
| 8. | கதிர்காமம் | — | 103 |

## பாகம் — 6

| | | |
|---|---|---|
| சுவாமி சிவானந்தரின் கந்த சஷ்டிச் செய்திகள் — 1945 | — | 104 |
| 1946 | — | 107 |
| 1947 | — | 110 |



ரிஷிகேஷ் சிவானந்தா ஆஸ்ரமத்தில் உள்ள
முருகன் திருக்கோயிலில்
ஸ்ரீ சுவாமி சிதானந்தா

# முருகன் பெருமை

## பாகம் —1.

## முன்னுரை

### 1. பிரார்த்தனை

இந்தப் பிரபஞ்சத்தை ஆளும் பரப்பிரம்மமும், நம் உள்ளங்களிலே குடிகொண்டிருப்பவரும், சிவ பெருமானின் இரண்டாவது குமாரரும், வள்ளி, தெய்வயானைக்கு விருப்பமானவரும், தன் அடியவர்களுக்கு விரைவாக வரங்கள் அளிப்பவரும், ஆற்றல், ஞானம், அன்பு, பேரானந்தம் ஆகியவற்றின் உருவமாகத் திகழ்பவருமாகிய சுப்பிரமணியப் பெருமானுக்கு வணக்கங்களும் வாழ்த்துக்களும் உரியதாகுக !

சுப்பிரமணியர் சிவபெருமானின் அவதாரம். எல்லா அவதாரங்களும் பரம்பொருளினின்றும் தோன்றியவையே. சுப்பிரமணியரும் கண்ணனும் ஒன்றுதான். ''படைத் தளபதிகளுள் நான் கந்தன்'' என்று கண்ணன் கீதையில் கூறுகிறான். அறத்தை நிலைநிறுத்தவும் கொடியவர்களைத் தண்டிக்கவும் இறைவன் பல்வேறு சமயங்களில் பலவிதமான நாமங்களோடும் உருவங்களோடும் அவதாரம் செய்கிறான்.

சிவபெருமானின் சைதன்யத்தின் ஒரு கலையிலிருந்து தோன்றியவர் சுப்ரமணியர். அவர் சிவபெருமானின் ஆற்றல் ஆவார். வள்ளியும் தெய்வயானையும் அவருடைய தெய்வீக மனைவியர்.

அவர்கள் முறையே இறைவனின் இச்சா சக்தியையும் கிரியா சக்தியையும் குறிக்கிறார்கள். இந்தக் கலி யுகத்தில் அனுமானைப் போலவே சுப்ரமணியரும் ஒரு கண்கண்ட தெய்வம். அவரிடத்தில் சிறிதளவு பக்தியைக் காட்டும் அடியவர்களுக்குக்கூட இம்மை, மறுமை ஆகிய இரு வகைகளிலும் நன்மையும் வெற்றியும் அளிக்கிறார். அவர் தென்னிந்தியாவில் அதிகமாக வணங்கப்படுகிறார். குகன், முருகன், குமரேசன், கார்த்திகேயன், சண்முகன், சுப்ர மணியன், ஸ்கந்தன், வேலாயுதன், சரவணபவன் ஆகிய பெயர்களெல்லாம் அவரையே குறிக்கும்.

படத்தில் சிவபெருமான் திரிசூலத்தை வைத் திருப்பதைப்போலவே சுப்ரமணியரும் வேலுடன் காணப்படுகிறார். வேல் என்பது ஆற்றலின் அடை யாளம். எனவே அவர் பிரபஞ்சத்தை ஆள்கின்றவர் என்பதைக் குறிக்கிறது. சுப்ரமணியக் கடவுளின் அடியவர்கள் வேலையும் வணங்குகிறார்கள். அவ ருடைய வாகனம் மயில். அது அவர் கர்வம், அகந்தை, வீண் பெருமை ஆகியவற்றை முற்றிலும் வென்றவர் என்பதைக் குறிக்கிறது. அவர் காலடியில் ஒரு நல்ல பாம்பிருக்கிறது. அது அவர் முற்றிலும் அச்சமற்றவர், அழிவற்றவர், ஞானம் உள்ளவர் என்பதைக் குறிக்கிறது. வள்ளி ஒரு பக்கத்திலும், தெய்வயானை மறு பக்கத்திலும் இருக்கிறார்கள். சில சமயங்களில் வேலுடன் மட்டும் காணப்படுகிறார். அப்பொழுது அவரைத் தண்டபாணி என்கிறோம். அத்தோற்றம் மாயையை வென்ற நிர்க்குண அம்சத்தைக் குறிக்கிறது.

ஆறு தலைகளும் ஆறு கதிர்கள் அல்லது இயல்பு களைக் குறிக்கின்றன. அவையாவன ஞானம் (அறிவு), வைராக்கியம் (உறுதி), பலம் (வலிமை), கீர்த்தி (புகழ்), ஸ்ரீ (செல்வம்), ஐஸ்வர்யம்

(தெய்வீக ஆற்றல்கள்) ஆகிய பண்புகள். நான்கு வேதங்கள், வேதாந்தங்கள், தத்துவ சாஸ்திரத்தின் ஆறு வகைகள் ஆகியவற்றைக் குறிக்கின்றன; அவர் ஞான இந்திரியங்கள் ஐந்தையும் மனதையும் அடக்கியவர் என்பதைக் குறிக்கின்றன; அவர் எண்ணிலடங்கா தலைகளையுடைய 'விராட் புருஷர்' என்பதைக் குறிக்கின்றன; அவர் எங்கும் நிறைந்து, எல்லா திசைகளையும் பார்த்துக்கொண்டிருப்பவர் என்பதைக் குறிக்கின்றன. அவர் சர்வ வல்லமை பொருந்தியவர்; அவர் தாம் விரும்பிய வண்ணம் உருவங்கள் எடுத்துத் தன்னை எண்ணிக்கையில் பெருக்கிக்கொள்ள வல்லவர் என்பதைக் குறிக்கின்றன.

திருச்செந்தூரிலும், உடுப்பியிலும், பழனி மலையிலும், கதிர்காமத்திலும், திருப்பரங்குன்றத்திலும் சுப்ரமணியக் கடவுளுக்கென பெரிய கோயில்களிருக்கின்றன. கதிர்காமத்திற்குச் சென்று நம்பிக்கையுடனும் பக்தியுடனும் இறைவுணர்வுடனும் வழிபட்டு, இரண்டு மூன்று நாட்கள் அங்கே தங்கியிருக்கும் அடியவர்களுக்கு சுப்ரமணியக் கடவுள் தம் விபூதியை அறிவுரைகளின் மூலம் வழங்குகிறார். அடியவர்களுக்கு விந்தையான அனுபவங்கள் ஏற்படுகின்றன. அங்கு ஸ்கந்த ஷஷ்டியின்போது ஒவ்வோராண்டும் பெரிய திருவிழா நடைபெறுகின்றது. அச்சமயம் கற்பூரம் மலைபோல் கொளுத்தப்படுகின்றது. மக்கள் ஆயிரக் கணக்கில்கூடி இறைவனை வழிபடுகின்றனர்.

இறைவன் சூரபத்மன் என்ற அரக்கனைக் கொன்ற நாளாகிய ஸ்கந்த ஷஷ்டியின்போது தென்னிந்தியாவிலுள்ள பல இடங்களில் மிகப் பெரிய அளவில் ஆடம்பரமாக விழா கொண்டாடப்படுகிறது. அடியவர்கள் மிகப் பெரிய அளவில்

பஜனையும், கீர்த்தனங்களும் வழிபாடுகளும் செய்கிறார்கள். ஆயிரக்கணக்கான மக்களுக்கு உணவளிக்கிறார்கள். பழனிக்குச் சென்று வழிபடுவதால் தீராத நோயெல்லாம் குணமடைந்து விடுகிறது. தென்னிந்தியாவில் சுப்ரமணியருடைய லீலைகளெல்லாம் நாடக வடிவில் திறந்த வெளி அரங்குகளில் நடித்துக் காட்டப்படுகின்றன.

புகழ்மிக்க நக்கீரர் என்னும் புலவர் கந்தன் பெருமையைத் ''திருமுருகாற்றுப்படை'' என்னும் நூலாகப் பாடியுள்ளார். இந்த நூலை தினந்தோறும் பக்தியுடன் படிக்கும் ஒருவர் வாழ்க்கையில் வெற்றியும், அமைதியும், வளமும் பெறலாம். சுப்ரமணியக் கடவுளின் பெருமையை உணர்ச்சியூட்டும் பாடல்களாக அருணகிரிநாதரால் எழுதப்பட்டுள்ள நூல் திருப்புகழ் எனப்படும். அருணகிரிநாதர் இறைவனை நேரில் தரிசித்தவர். காவடிச் சிந்து என்பதும் சுப்ரமணியரின் பெருமையைக் கூறும் ஒருவகைப் பாடலாகும்.

''சுப்ரமணியக் கடவுளே! கருணையே வடிவான இறைவா! எங்களிடத்தில் பக்தியும் கிடையாது, நம்பிக்கையும் இல்லை. உன்னைச் சரியான முறையில் வணங்குவதற்கோ, தியானம் செய்வதற்கோ எங்களுக்குத் தெரியவில்லை. நாங்கள் உன் குழந்தைகள். எங்கள் வழியைத் தவறவிட்டு, இலட்சியத்தையும் உன் திருநாமத்தையும் மறந்துவிட்டோம். இரக்கமுள்ள தந்தையே! இந்த வழி தவறிய குழந்தைகளை மீட்டு, அவர்களைப் பேணிப் பாதுகாத்து, உன் அருளையும் ஆசியையும் வழங்க வேண்டியது உன் கடமையல்லவா?

அன்னை வள்ளியே! நீ எங்களுக்காக இறைவனிடம் பரிந்து பேச மாட்டாயா? இந்த

உலகிலுள்ள உணர்ச்சிகள் எல்லாவற்றுள்ளும் மிகச் சிறந்தது ஒரு தாய்க்குத் தன் குழந்தைகளிடமுள்ள அன்புதான். நாங்கள் பயனற்றவர்களாகவும் கடமை மறந்தவர்களாகவும் மாறிவிட்ட போதிலும், எங்களை மன்னிக்கவேண்டும். கடமையுணர்ச்சி உள்ளவர்களாகவும் நன்றியுள்ளவர்களாகவும் எங்களை மாற்றிவிடு. இக்கணம் முதல் நாங்கள் உன்னைச் சார்ந்தவர்கள். எப்பொழுதும் உனக்குரியவர்கள். சரியான பாதையிலிருந்து தவறிவிட்ட மக்களை நெறிப்படுத்தி அறிவு புகட்டி, திருத்தி உருவாக்க வேண்டியது தாயின் கடமையல்லவா? உன்னிடமிருந்து எங்களைப் பிரிக்கும் பெரும் பிளவு அல்லது திரையை நீக்கிவிடு. எங்களை வாழ்த்தி, அறிவூட்டி உன் தாமரைத்தாள்களில் எங்களைச் சேர்த்துக்கொள். இன்னமும் சொல்ல வேண்டியது எங்களுக்கு ஒன்றுமில்லை. இதுதான் நாங்கள் உனக்கும் உன் இறைவனுகிய சுப்பிரமணியக் கடவுளுக்கும் விடுக்கும் உண்மையான உருக்கமான வேண்டுகோளும் பிரார்த்தனையுமாகும்.''

## 2. கந்தன் வழிபாடு

சண்முகனின் வழிபாடு தென்னிந்தியாவிலுள்ள பெரும்பாலான மக்களிடையே பரவியுள்ளது. அனேகமாக ஒவ்வொரு ஊரிலும் சண்முகனுக்குக் கோவில் இருக்கின்றது. தமிழ் நாட்டில் சண்முகனுக்கு முருகன் என்று பெயரிட்டு அழைக்கிறார்கள். காற்றுக் கடவுளுக்கு 'வாயு' என்றும், மழைக் கடவுளுக்கு 'வருணன்' என்றும் இருப்பதைப் போல் இயற்கைக்கு தலைவனை ''முருகன்'' என்ற தமிழ்ச் சொல் குறிக்கிறது.

''முருகன்'' என்ற சொல் மாருத அழகுடையவன், என்றும் இளமையானவன், தெய்வத்

தன்மையுடையவன் என்று பொருள்படும். மேற்கூறிய இயல்புகளுடைய எந்தத் தெய்வத்தையும் முருகன் என்று சொல்லலாம். எனவே கந்தன் அல்லது முருகனை வழிபடுதல் எந்தவொரு தனிப்பட்ட மதம் அல்லது கொள்கைக்கு மாத்திரம் உரியதல்ல. ஒரு வேளை தன்னுடைய எல்லாவிதமான துன்பங்களையும் போக்கி தனக்கு நல்லதைச் செய்யும் கண்ணுக்குப் புலப்படாத ஒரு சக்தி அல்லது ஆற்றலுக்கு நன்றி செலுத்தவேண்டும் என்ற மனிதனின் ஆவலின் காரணமாக அவ்வாறிருக்கலாம். எனவே முருகனை வழிபடுவது இயற்கையை வழிபடுதல் எனலாம். இயற்கை உள்ளத்தில் கிளர்ச்சியை உண்டுபண்ணி உணர்வூட்டும் காட்சிகளால் நிறைந்திருப்பதால், இயற்கையை வழிபடுவதுதான் சரியான முறை என்று நம்முடைய முன்னோர் கருதியிருக்கலாம்.

இயற்கையான வாழ்க்கை நடத்துவது இயற்கையோடு வாழ்வதாகும். இதுதான் இறைவன் விருப்பத்துடன் இசைந்த வாழ்வு. புலன்கள், சினம், காமம் இவற்றை அடக்குவது உயர்ந்த வாழ்க்கையை அடையக் கூடிய வழியாகும். இறைவனுக்கு ஒருவர் செய்யும் வழிபாடு மற்றவர்களுக்கு எண்ணம், சொல், செயல் ஆகியவற்றால் துன்பமிழைக்காமலிருப்பதாகும். அப்போதுதான் இயற்கையான வாழ்வில் அமைதியும் இன்பமும் இருக்கும். கந்தனின் சகுண இயல்பை வழிபடுவதன் மூலம் இந்த மாதிரியான வழிபாட்டையும் வாழ்க்கையையும்தான் கந்தபுராணம் நமக்குக் கற்பிக்கிறது. உண்மையில் இயேசு கிறிஸ்துவும் இதையே சொல்கிறார். ''உன் அயல் வீட்டுக்காரனை உன்னைப்போல் நடத்து. மற்றவர்கள் உன்னிடம் எவ்வாறு நடந்து கொள்ளவேண்டுமென்று விரும்புகின்றாயோ அவ்வாறே நீயும் அவர்

களிடம் நடந்துகொள்.'' எவருக்கும் தீங்கு செய்யாமல் வாழ வேண்டும் என்பதே அனைத்து மதங்களின் சாரமாகும்—அஹிம்சா பரமோ தர்ம:

எனவே நாம் முருகப்பெருமானை வழிபடும் போதெல்லாம், ''எங்கும் நிறைந்த அழகனும் அனைத்து உயிர்களுக்குள்ளேயும் குடிகொண்டு, சுப்ரமணியன் அல்லது முருகன் என்னும் உருவில் இருக்கும் இறைவனை வணங்குகிறேன்'' என்ற பாவம் அல்லது மனப்பாங்கு நமக்கிருக்கவேண்டும். எல்லையற்ற பரம்பொருளாயும் அதே சமயத்தில் ஒவ்வொருவர் உள்ளத்திலும் குடிகொண்டிருப்பவனுமாகிய எல்லாம் வல்ல இறைவனின் அழியாத அமரத் தன்மையையும், சர்வ வல்லமை படைத்த தன்மையையும் எல்லாமுணர்ந்த தன்மையையும் நம்முடைய மனம் உணர்ந்து அதன் மீது ஒரு பற்று ஏற்படுத்திக் கொள்ள இந்தச் சகுண உருவம் உதவுகிறது.

மற்ற தேவதைகளின் வழிபாட்டில் உள்ளதைப் போலவே கந்தபெருமானின் சகுண வழிபாட்டிலும் அனுசரிக்க வேண்டிய சில விரதங்கள் அல்லது நியமங்கள் உள்ளன. முன்னொரு காலத்தில் முசுகுந்தன் என்னொரு மன்னன் இருந்தான். அவன் சைவ சமயத்தில் தீவிரமான பற்றுள்ளவன். ஒரு சமயம் அவன் வசிஷ்ட முனிவரிடம் சென்று தன் வாழ்வில் வெற்றியும், அமைதியும், முன்னேற்றமும் பெறவேண்டி தான் அனுசரிக்க வேண்டிய சிறப்பான விரதம் ஒன்றைப்பற்றி விளக்கமாகக் கூறுமாறு வேண்டிக்கொண்டான். வசிஷ்ட முனிவர் கந்த பெருமானுடைய விரதங்களைப் பற்றியும் அவற்றின் சிறப்புக்களை விவரித்தும் கூறினார்.

அவைகளுள் ஒன்று வெள்ளிக்கிழமைதோறும் அனுசரிக்கும் விரதமாகும், இந்த விரதத்தை

மூன்று ஆண்டு காலம் வெள்ளிக்கிழமைதோறும் அனுஷ்டித்து பகீரதன் தன் பகைவனுன கோரன் என்பவனை வென்ருன். வெள்ளிக்கிழமையன்று நீராடி, தூய்மையுடன் மிகுந்த பக்தியுடன் இறைவனுக்குப் பூசையும், அர்ச்சனையும் செய்ய வேண்டும். இதைச் செய்பவன் தான் செய்யும் காரியங்கள் எல்லாவற்றிலும் தவருது வெற்றி பெறுவான்.

மற்றென்று கார்த்திகை விரதம். ஒவ்வொரு கார்த்திகை நட்சத்திரமன்றும், நீராடித் தூய்மையுடன் பூசை முதலியவற்றை செய்து நம்பிக்கையுடனும் பக்தியுடனும் இந்த விரதத்தை அனுஷ்டிக்கவேண்டும். கணேசரின் அறிவுரைப்படி நாரத மகரிஷி இந்த விரதத்தை மேற்கொண்டார். 12 ஆண்டுகளுக்குப் பிறகு நாரதர் தாம் விரும்பிய வண்ணமே சப்தரிஷிக் கூட்டத்தில் மிகப்பெரிய பதவியைப் பெற்ருர்.

ஷண்முகனைக் குறித்து மேற்கொள்ளும் விரதங்களுள் மிகச்சிறந்தது கந்த ஷஷ்டி விரதமாகும். இதை ஒவ்வோராண்டும் ஐப்பசி மாதம் தீபாவளி அமாவாசைக்குப் பிறகு வளர்பிறையில் (பிரதமை) முதல் நாளன்று தொடங்கவேண்டும். ஷஷ்டி வரை ஆறு நாட்கள் முழுதும் பட்டினி இருந்து, இறைவனுக்குப் பூஜை செய்வதிலும், கந்தன் புகழைப் பற்றிப் படிப்பதிலும், பஜனை, தியானம் முதலியவற்றிலும் ஈடுபடவேண்டும். தொடர்ந்து ஆறு நாட்கள் பட்டினி கிடப்பது கடினமாக இருந்தால், முதல் ஐந்து நாட்கள் ஒருவேளை மட்டும் உண்டு, ஷஷ்டியாகிய ஆருவது நாள் மட்டும் முழுப் பட்டினியாக இருக்கலாம். அந்த நாளில்தான் சூரபத்மனுகிய அசுரனை ஷண்முகப்பெருமான் வெற்றிகொண்டார். இந்த விரதத்தை அனுசரிப்

பவர்கள் தாங்கள் எடுத்த காரியங்கள் அனைவற்றி லும் வெற்றிபெறுவதோடு முடிவில் வீடுபேறும் அடைவார்கள்.

விரதங்களைப்பற்றிய விவரங்களைக் கேட்ட முசுகுந்த மன்னன், வசிஷ்ட முனிவரிடமிருந்து விடைபெற்றுச் சென்று, நம்பிக்கையுடனும் தீவிரமாகவும் அவற்றை மேற்கொண்டு ஷண்முகப் பெருமானை நேரில் தரிசிக்கும் பேற்றைப் பெற்றான். இறைவன் அவருக்கு அமைதி, செழிப்பு, முன்னேற்றம் ஆகியவற்றை அளித்து, முடிவில் கைவல்ய மோட்சத்தையும் வழங்கினார்.

சுப்ரமணியக் கடவுள் உங்களுக்கும் அந்தமாதிரி விரதங்களை அனுஷ்டிக்கக் கூடிய வலிமையை அளித்து, நீங்களும் அவருடைய ஆசிகளைப்பெறக் கூடிய பேற்றை பெறுவீர்களாக!

## 3. அசுரர்களின் முற்பிறவி

கந்தனின் லீலைகளைப்பற்றிக் கேட்ட முனிவர் கள், சூரபத்மன் எப்படி இறைவனுக்கு வாகன மானான் என்றும், மற்றும் அவன் எப்படி போர்க் களத்தில் இறைவனால் கொல்லப்பட்டான் என்றும் சூதமுனிவரைக் கேட்டார்கள். அதைக்கேட்ட சூதமுனிவரும் அசுரர்கள் சூரபத்மன், சிம்மமுகன், தாரகாசுரன், அஜமுகி என்று பிறப்பெடுப்பதற்கு முன் அவர்களுடைய வரலாற்றைப்பற்றிக் கூறினார்.

ஒருசமயம் தேவர்கள் சிவபெருமானுடைய தாண்டவத்தைக் காண்பதற்காகக் கைலாயத்திற்கு வந்து கூடினார்கள். தத்தம் வாகனங்களை மலை அடிவாரத்தில் விட்ட பிறகு, பிரம்மா, விஷ்ணு, கார்த்திகேயன் ஆகியோர் தாண்டவ

தரிசனத்துக்காக மேலே சென்றூர்கள். அன்னம், கருடன், மயில், சேவல் ஆகிய வாகனங்கள் மலையடிவாரத்திலிருந்தன.

தேவர்கள் அனைவரும் மேலே சென்றபிறகு, சிவபெருமானுடைய பூதகணங்களாகிய, சூரன், பத்மன், சிம்மமுகன், தாரகன் முதலிய நால்வரும் வாகனங்களுக்கிடையே சண்டை மூட்டி விட்டார்கள். மயிலும் சேவலும் ஒரு பக்கத்திலும், அன்னமும் கருடனும் மற்றொரு பக்கத்திலு மிருந்தன. நான்கு பூதகணங்களும் முதல் கட்சி யில் சேர்ந்து கொண்டு, அன்னத்திற்கும் கருட னுக்கும் பலத்த காயங்களை உண்டாக்கிஞர்கள்.

விஷ்ணுவும், பிரம்மாவும் கந்தனிடம் புகார் செய்தார்கள். கந்தன் நான்கு பூதகணங்களும் அசுர குலத்தில் பிறந்து, தேவர்களுக்குத் துன்ப மிழைத்து, முடிவில் கந்தனுடைய வேலால் கொல் லப்பட்டு மடிய வேண்டுமென்று சாபமிட்டான். எனவே பூதகணங்கள் அசுர குலத்தில் பிறந்து. சூரபத்மன், சிம்மமுகன், தாரகன் என்ற பெய ருடன் வாழ்ந்தார்கள்,

பூதகணங்கள் தாங்கள் கீழ்கண்டவாறு வாகனங்களாக ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும் என்று கந்தனை வேண்டிக்கொண்டார்கள். மயிலும், சேவலும் கந்தனுக்கும், சிம்மம் தேவிக் கும், யானை சாஸ்தாவுக்கும் வாகனமாக, அமைய வேண்டும். அவர்கள் கேட்டபடியே வரங்கள் கொடுக்கப்பட்டன. இவ்வாறு சூரபத்மன் கந்தனுக்கு வாகனமாகவும், சேவற்கொடியாகவும் ஆஞன். சிம்மமுகன் இறந்ததும் காளிதேவியின் வாகனமாஞன். தாரகாசுரன் ஹரிஹர புத்திர னுக்கு யானை வாகனமாஞன்.

அசுரர்களின் முற்பிறவியைப்பற்றி புராணத்தில் வேறு ஒருவிதமாகவும் கூறப்பட்டுள்ளது. சிவபெருமானின் பூதகணமாவதற்கு முன்னுல் சூரபத்மன், சகத்தீவை தன் இராச்சியமாகக் கொண்ட பிரபாகரன் என்ற நல்ல அரசனுக இருந்தான். கார்த்திகேயனுக்கு வாகனமாகவும், சேவற் கொடியாகவும் இருக்கும் சிறப்பைப்பற்றி அகஸ்திய முனிவர் சொல்லக்கேட்ட சூரபத்மன், கடுமையாகத் தவமியற்றி சிவபெருமானின் பூத கணங்களுள் ஒருவனுக ஏற்றுக் கொள்ளப்படும் பெருமை பெற்முன்.

தராகாசுரனும், சிம்மமுகனும் காளிதேவிக்கும் சாஸ்தாவுக்கும் முறையே சிங்கமாகவும், யானையாகவும் வாகனங்களாக அமைய வேண்டுமென்று மிகவும் ஆசைப்பட்டார்கள், இதை எப்படிப் பெறுவது என்பதை திரிணபிந்து என்ற முனிவரிடம் கேட்டறிந்து, தவமியற்றியதனுல் சிவபெருமானின் பூதகணங்களாக ஏற்றுக் கொள்ளப்பட்டு சூரன், பத்மன் ஆகியவர்களுடன் இருந்தார்கள்.

சூரபத்மனின் சகோதரி அஜமுகி என்பவள், முற்பிறவியில் சித்திரரேகா என்ற பெயருடனிருந்தாள். அவள் கணவன் பெயர் புண்டரீக சர்மா. சித்திரரேகா காமப்பேய் மாதிரி, தன் கணவனிருக்கும் போதே நடத்தை கெட்டு மிகவும் மோசமாக நடந்து கொண்டாள். அப்பொழுதும் புண்டரீக சர்மா என்னும் அந்த பிராமணன் அவளிடம் அன்புடன் நடந்து கொண்டான். ஒருமுறை துர்வாசமுனிவர் அந்தப் பிராமணன் வீட்டிற்கு வந்தார். சித்திரரேகா மிகுந்த காமத்துடன் முனிவரைத் கட்டித் தழுவிக்கொண்டாள். வேண்டுமென்றே அவள் செய்த காரியத்தைக் கண்ட முனிவர், அவள் மீது மிகவும் கோபம்

கொண்டார். அவருடைய கோபத்தைத் தாங்க முடியாத சித்திரரேகா வீதியில் ஓடிச்சென்று ஓர் ஆட்டுமந்தைக்குள் ஒளிந்து கொண்டாள். ஆனால் அவளிருக்குமிடத்தை துர்வாசர் கண்டு பிடித்து விட்டார். அவருடைய சீடன் ஒருவன் அவளைப் பிடித்து ஓர் ஆல மரத்தோடு சேர்த்துக் கட்டி விட்டான். அவள் ஆட்டின் முகத்துடன் அசுர குலத்தில் பிறக்க வேண்டுமென்று முனிவர் சாப மிட்டார். அவள் காம இச்சையின் விளைவாக அவளுக்கு இரண்டு மக்கள் பிறப்பார்கள் என்று சாபமிட்டார். அவர்கள் வாதாபி, வில்வலன் என அழைக்கப்பட்டனர்.

மாயை முற்பிறவியிலும் கச்யப முனிவரையே கணவனாகப் படைத்திருந்தாள். அவளுடைய மக்கள் தேவர்களால் கொன்று அழிக்கப்பட்டார் கள். எனவே மறுபிறவியில் அதே முனிவரிட மிருந்து தனக்குப் பிறந்த மக்களால் தேவர்களை அழிப்பதாகச் சபதம் செய்தாள். அவளுடைய ஆசையும் நிறைவேறியது.

## 4. கந்த மகா புராணத்தில் கூறப்பட்டுள்ள கார்த்திகேயனும், தாரகாசுரனும்

பலிக்குப் பிறகு, கல்கஞ்சன், மகா ரௌத்ரன், காலகேயன், நிவாதகவசன் முதலிய அசுரர்கள் இந்திரனுக்கு பகைவர்களாகப் பிறந்தார்கள். நமுச்சியின் மகனை தாரகாசுரன் கடுமையாகத் தவம் செய்தான். அதைக்கண்ட பிரம்ம தேவ னுக்குப் பெருமகிழ்ச்சி ஏற்பட்டது. தாரகாசுரன் அவரிடம் தான் என்றும் அழியாமலிருக்கவும், மரண மடையாமலிருக்கவும், மற்றவர்களால் வெல்லமுடியாமலிருக்கவும் வ ர ம் வேண்டினான்.

பிரம்மதேவன் மற்றவர்களால் அவன் வெல்லப் படாமலிருக்க வரம் கொடுத்தார். அவன் மீண்டும் மீண்டும் தேவர்கள்மீது படையெடுத்து அவர்களைத் தோல்வியுறச் செய்தான்.

தேவர்கள் திருமாலிடம் சென்றார்கள். விஷ்ணு, அப்போது சமாதி நிலையிலிருந்த சிவபெருமான் எப்படியாவது திருமணம் செய்து கொள்ளச் செய்யுமாறு ஒரு வழி காணச் சொன்னார். தக்ஷ னுடைய வேள்வியில் தன் உடலை எரித்துக்கொண்ட சதி, அப்போது மலையரசனாகிய இமவானுக்குப் பார்வதி என்னும் பெயருடன் மகளாகப் பிறந் திருந்தாள்.

தேவர்கள் இமவானை அணுகி, அவனுடைய புத்திரியாகிய பார்வதியைச் சிவபெருமானுக்கு மணம் செய்வித்து தேவர்களுடைய காரியம் நிறை வேற உதவுமாறு கேட்டுக்கொண்டார்கள். சிவ னிடத்திலிருந்து பிறந்த ஒருவரால் மட்டுமே தாரகாரசுனை அழிக்க முடியுமாதலால், இமவான் எட்டு வயதுள்ள தன் மகள் பார்வதியைச் சிவ னிடம் அழைத்துச் சென்றான். அவன் சிவனிடம் அன்றாடம் வந்து அவரை வழிபட அனுமதி வேண் டினான். அவர் வேண்டுகோளை அனுமதித்தாலும், பார்வதியை அழைத்துவர வேண்டாம் என்று சொன்னார். பார்வதி அவர் சொன்னதை மறுத்துப் பேசி அவருடைய தெய்வத் தன்மையை நினைவூட்டி, அவரைத் தான் தினந்தோறும் வந்து வழிபட அனுமதிக்குமாறு வேண்டிக் கொண்டாள். அவ ளுடைய வாதத்தையும், புத்தி சாதுரியத்தையும் கண்டு மகிழ்ந்த சிவபெருமானும் அவளுக்கு அனுமதி அளித்தார்.

சில நாட்களில் பார்வதி சிவபெருமானுடைய தியானத்திலேயே முற்றிலும் ஈடுபட்டாள். அதே சமயத்தில் தேவர்களால் தூண்டப்பட்ட காம தேவன் (மன்மதன்) சிவபெருமானை அவருடைய சமாதி நிலையிலிருந்து கலைப்பதற்காக அவரிருக்கு மிடத்துக்கு வந்தான். சிவபெருமான் தமது நெற்றிக் கண்ணைத் திறந்தார். அதிலிருந்து வெளிப்பட்ட கதிர்களால் மன்மதன் எரிந்து சாம்பலானுன். அச்சமயம் வழக்கம்போல் அவரை வழிபட பார்வதி வந்தாள். தேவர்களும் வந்து சேர்ந்தார்கள்,

தேவர்களுக்கு அவர்கள் விரும்பிய வரம் கிடைத்தது. மன்மதன் மனைவியாகிய ரதியும் தன் கணவனை திரும்பப் பெறுவதற்காகக் கடுமையான தவமியற்றிஞள். சிவபெருமானும் மனமிரங்கி மன்மதனை உயிர்ப்பித்தார். ஆனுல் அவன் சரீரமற்ற அநங்கனுக இருந்தான். சம்பான் என்ற அரக்கன் எடுத்துச் சென்ருன். ரதிதேவி அங்கே மாயாவதி என்ற பெயருடன் இருந்தாள். கந்த புராணத்தின்படி, பார்வதி தவமியற்றி சிவபெருமானை ரதிக்காக வேண்டி வரம் பெற்ருள் என்று சொல்லப்படுகிறது. சிவபெருமான் மீண்டும் சமாதி நிலையை அடைந்தார். பார்வதியும் அவருக் கருகிலேயே அமர்ந்து கடுமையான தவத்தில் ஈடுபட்டாள்.

தேவர்கள் மீண்டும் சிவபெருமானைப் பிரார்த்தித்தார்கள். பார்வதி தன்னிடம் காட்டிய பக்தியைக் கண்டு மகிழ்ந்த சிவபெருமானும் மகிழ்ந்து, ஒரு வாலிப பிரம்மச்சாரியின் வடிவம் தாங்கி வந்து அவளுக்கு வேண்டிய வரத்தை அளித்தார். தேவர்கள் விரும்பிய வண்ணம், சிவபெருமானுடைய அம்சமாகிய கதிர்கள் கைலாயத்திலுள்ள

கந்தமாதன சிகரத்திலிருந்து பிரளயாக்கினி (ஊழிக்கால நெருப்பு) போன்று வெளி வந்தது. பிரபஞ்ச முழுவதுமே அத்தீயில் எரிந்துவிடும் போலிருந்தது. பிரம்மதேவனும் மற்ற தேவர்களும் கலக்கமடைந்தார்கள். தேவர்களின் விருப்பத்திற்கிணங்க அக்கினிதேவன், மாறுவேடத்துடன் பிரதான வாயிலில் காவலுக்கிருந்த நந்திக்கும் தெரியாமல் உள்ளே நுழைந்து சிவபெருமானுடைய தனிமையைக் கெடுத்தான். பாணிபாத்திரனுக வந்து சிவபெருமானிடம் பிச்சை கேட்டான்.

சிவபெருமான் கோபமடைந்து தன்னிடமுள்ள திரிசூலத்தால் அக்கினியைக் கொல்ல வந்தார். பார்வதி அவரைத் தடுத்து நிறுத்திஞள். பார்வதி பிட்சையுடன் வந்தபோது அக்கினி தன் சுய உருவத்தில் தோன்றிஞன். பார்வதி கோபமடைந்து அவன் எல்லாப் பொருள்களையும் புசிக்கும் சர்வ பக்ஷியாக வேண்டுமென்று சாபமிட்டு அவர்கள் அனைவரும் சதி செய்து அக்காரியத்தில் ஈடுபட்டதன் தீய விளைவை அனுபவிப்பார்கள் என்று சொன்ஞள்.

அக்கினி திரும்பி வந்து அனைவற்றையும் தேவர்களிடம் சொன்ஞன். அக்கினியின் சம்பந்தம் பெற்ற இந்திரன் உள்பட்ட தேவர்கள் அனைவரும் கர்ப்பமடைந்து, அளவிட முடியாத துன்பப் பட்டார்கள். அவர்கள் திருமாலை வந்தடைந்தார்கள். அவருடைய ஆலோசனையின்படி மீண்டும் சிவபெருமானையே சரணடைந்தார்கள். சிவபெருமான் அவர்களுக்குத் துன்பம் கொடுத்த கதிர்களை கக்கிவிடும்படி ஆலோசனை கூறிஞர். அவர்கள் கக்கியவுடன் எல்லாக் கதிர்களும் ஒன்று திரண்டு ஓர் ஒளிவிடும் பெரிய பொன் மலையாக மாறிற்று.

சிவபெருமான் அக்கதிர்களை பெண்கள் அனைவரின் கருப்பைகளிலும் சேர்ப்பிக்குமாறு அக்கினிக்குக் கட்டளையிட்டார். கங்கைக் கரையில் காத்திருந்து விடியற்காலையில் பிரம்ம முகூர்த்தத்தில் நதியில் நீராட வந்த ரிஷிபத்தினிகளின் கருப்பையில் கதிர்களைச் சேர்த்தான்.

ரிஷிபத்தினிகளின் மயிர்க்கால்களிலெல்லாம் கதிர்கள் நிறைந்து சுடர்விட்டன. அக்கினி விடுதலை பெற்றான். ரிஷிபத்தினிகள் தங்கள் கணவன்மார்களால் பறவைகளாகச் சபிக்கப்பட்டார்கள். தங்கள் நடத்தைக்கு வெட்கப்பட்ட ரிஷிபத்தினிகள், தங்களிடமிருந்த கதிர்களை இமயமலையின்மேல் உமிழ்ந்தார்கள். இந்த கதிர்கள் அனைத்தும் ஒன்று சேர்ந்து கங்கைக் கரையில் ஆறுமுகம் படைத்த சண்முக வடிவமாக (1) கார்த்திகேயன், (2) காங்கேயன், (3) சகன், (4) விசாகன், (5) அதிவல்லபன், (6) மகாபலன் என்ற பெயர்கள் பெற்றுத் தோன்றியது.

கங்கைக்கரையில் தோன்றிய ஷண்முகன் பிறப்பைப்பற்றிக் கேள்விப்பட்ட தேவர்கள் மிகவும் மனமகிழ்ந்தார்கள். பார்வதிதேவி வியப்படைந்தாள். அவள் மார்பகங்களில் பால் ஊறிற்று. நாரதர்மூலம் கேள்விப்பட்டு, சிவபெருமானும், பார்வதியும், தேவர்கள், யட்சர்கள், கந்தர்வர்கள், சித்தர்கள் ஆகியவர்கள் புடைசூழ வந்தார்கள். தெய்வச் சுடரொளி வீசும் குழந்தைவடிவிலிருந்த ஷண்முகனைப் பிரார்த்திக்கத் தொடங்கினார்கள். பார்வதிதேவி குமரக் கடவுளை மடிமேலிருத்திப் பாலூட்டினாள். குமரன் சிவபெருமானின் மடியின் மீதேறி, அவர் அணிந்திருந்த அணிகளாகிய பாம்புகளுடன் விளையாடியபோது,

வாசுகி என்னும் பாம்பு அவன் பிஞ்சுக் கரங்களின் வலிமை தாங்காமல் துன்பப்பட்டான். அதன்பின் சிவபெருமானின் விருப்பத்திற்கிணங்க, பிரம்மன் முதலிய தேவர்கள், கார்த்திகேயனைத் தங்கள் சேனாதிபதியாக்கினார்கள். மிருத்தியு என்ற காலதேவனின் மகளையும் அவருடைய துணைவியாக்கினார்கள். சேனையைத் தன் துணைவியாகக் கொண்ட கார்த்திகேயன், தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்க, தாரகாசுரனுடன் போரிட்டு அவனைக்கொன்றான்.

---

## பாகம் - 2

## 1. ஸ்கந்த விஜயம்

### முன்னுரை

புராணங்களின் எண்ணிக்கை பதினெட்டு. அவையாவன: பிரம்ம புராணம், பத்ம புராணம், விஷ்ணு புராணம், சிவ புராணம், பாகவத புராணம், பவிஷ்ய புராணம், அக்னி புராணம், பிரம்ம வைவர்த்த புராணம், லிங்க புராணம், வராக புராணம், ஸ்கந்த புராணம், வாமன புராணம், மத்ஸ்ய புராணம், கூர்ம புராணம், கருட புராணம், பிரம்மாண்ட புராணம், முதலியன. இவைகளுள் ஸ்கந்த புராணம் மிகப்பெரியது. வேதங்களிலும், உபநிடதங்களிலும் கூறப்பட்டுள்ள கருத்துக்களை சாதாரண மக்களால் எளிதில் புரிந்து கொள்ள முடியாது. எனவே வேதங்களைத் தொடுத்தவரான வேதவியாச பகவான் வேதங்களிலுள்ள உண்மைகளை மக்கள் எளிதில் புரிந்து கொள்ளுவதற்காக புராணங்களில் அவர்களுக்கு புரியக்கூடிய முறையில்

எளிதாக எடுத்துக் கூறியுள்ளார். நுணுக்கமான பொருள்களை மிகப் பெரிதாக்கிக் காட்டும் பூதக்கண்ணாடி போன்று ஆழ்ந்த கருத்துக்களை மக்களுக்குப் புரியும் வகையில் எடுத்துக்கூறி அவர்களுடைய உணர்வுகளில் நன்கு பதியும்படிச் செய்கின்றன.

சிவபெருமானின் ஆன்மீகப் புதல்வனான கந்தனுடைய அவதாரத்தையும் திருவிளையாடல்களையும் பற்றிக் கந்தபுராணம் கூறுகிறது. ஸ்கந்த புராணம் என்னும் நூல் இரண்டு வகைப்பட்டது. முதலாவது காண்டங்களாகவும் மற்றது சம்ஹிதைகளாகவும் அமைந்துள்ளன. முதலில் சொல்லப்பட்ட நூல் ஸ்கந்தபெருமானின் அவதாரத்தைப் பற்றியும் அவன் கைகளால் தாரகாசுரன் அழிந்ததைப் பற்றியும் சுருக்கமாகக் கூறுகிறது. ஆனால் மற்ற நூலோ கந்தனுடைய தெய்வீக அவதாரம், அவனுடைய தெய்வீகத் திருவிளையாடல்கள் அவதாரத்தின் தேவை, அவனுடைய புனிதமான அவதாரம், அவனின் இளம் பருவத் திருவிளையாடல்கள், அசுரர்களுக்கு எதிராகத் தேவர்களின் சேனையை நடத்திச் சென்று அவர்களை அழித்தது ஆகியவைகளைப்பற்றி மிகவும் விளக்கமாகக் கூறுகிறது. கச்சியப்ப சிவாச்சாரியரால் தமிழில் எழுதப்பட்டுள்ள கந்தபுராணம் என்ற நூலும் உள்ளது. அது சம்ஹிதைகளாகப் பிரிக்கப்பட்டுள்ள ஸ்கந்த புராணத்தை அடிப்படையாகக் கொண்டு செய்யுள் வடிவில் இயற்றப்பட்டுள்ளது. அது முருகக் கடவுளின் ஆணைப்படி எழுதப்பட்டு முதலடி அவராலேயே எடுத்துக் கொடுக்கப்பட்டது.

கொடியவர்களை அழித்து நல்லவர்களை காப்பதற்குத்தான் இறைவன் அவதாரம் செய்தார். வலிமை பொருந்திய சூரபத்மன் என்னும் அரக்கன் தேவர்களை அளவு கடந்த துன்பத்துக்கு உள்ளாக்

கிறன். இறைவன் அவனைப் போரில் வென்று தேவர்களுக்கு விடுதலை அளித்தார். இது தீபாவளியை அடுத்த ஆறுவது நாளான ஸ்கந்த ஷஷ்டி நாளன்று நடந்தது. ஆறுமுகனுடைய கோயில்கள் அனைவற்றிலும் இந்த நாளை மிகவும் சிறப்புடன் கொண்டாடுகிறார்கள். அடியவர்களும் ஆன்மீக சாதகர்களும் இந்த ஆறு நாட்களிலும் கடுமையான விரதங்களை அனுஷ்டித்து, வழிபாடுகள் நடத்தி, இறைவனோடு ஆன்மீக ஒருமைப்பாடு பெற வேண்டிய நாட்களாகும். தெய்வீக ஞானத்தை வழங்கும் சண்முகப் பெருமானின் புகழ் ஓங்குக!

## 2. தட்சன் வேள்வி

பிரம்மதேவனுக்கு தட்சன் என்றொரு மகனிருந்தான். தவத்தின் அளவு கடந்த பெருமையைப் பற்றித் தந்தையிடமிருந்து கேட்டறிந்த தட்சன் மலைகளடர்ந்த இடத்துக்குச் சென்று சிவபெருமானைக் குறித்துக் கடுமையான தவம் இயற்றினன். அவன் தவத்தைக்கண்டு மனமகிழ்ந்த சிவபெருமானும் அவனுக்கு எண்ணற்ற வரங்களை ஈந்தார். அவற்றால் தட்சன் தேவர்களுக்கும் மூவுலகங்களுக்கும் மன்னனானன். அதைவிட பார்வதி தேவியையே தன் மகளாகப்பெறும் பேற்றையும் பெற்றான்.

ஒருமுறை சிவபெருமானும் பார்வதியும் பேசிக் கொண்டிருந்தபோது பார்வதி தேவி தன்னுடைய பெருமையையே வலியுறுத்திப் பேசிக்கொண்டு தன்னலங் கொண்டு இறுமாப்புடன் பேசினாள். இந்த வீண் பெருமைக்கு ஒரு பாடம் கற்பிக்க வேண்டி அவள் ஒரு மனிதப் பிறவியை அடைந்து மீண்டும் கைலாய கிரிக்கு வரவேண்டுமென சாபம் பெற்றாள்.

பார்வதி பூவுலகுக்கு வந்து ஒரு குளக்கரையில் குழந்தையின் உருவில் இருந்தாள். காட்டில் உலாவ வந்த தட்சன் தாமரை குளத்தில் இருந்த இந்த குழந்தையைக் கண்டு, வீட்டுக்கு எடுத்துச் சென்று தன் மகளாகவே வளர்த்து வந்தான். தாட்சாயணி என்றழைத்த அவளிடம் நாட்கள் செல்லச் செல்ல சிவபெருமானிடம் மிகவும் தீவிரமான பக்தி வளர்ந்தது. அவள் சிவபெருமானேயே மணக்க விரும்பியதைக் கேட்டு தட்சனும் மிகவும் மகிழ்ச்சி அடைந்தான்.

சிவபெருமான் ஒரு வேடனுடைய உருவத்தில் அவள் முன் தோன்றி அவளை விரைவில் மணப்பதாக உறுதி கூறினார். இதைக் கேள்வியுற்ற அவள் பெற்றோர்கள் அவளுடைய திருமணத்தை மிகப் பொருத்தமான முறையில் சிறப்புடன் நடத்துவதாகத் தீர்மானித்தார்கள். ஆனால் சிவபெருமான் முறைப்படி திருமண சடங்குகளுடன் பார்வதியை மணப்பதற்கு பதிலாக, திடீரென்று திருமண மண்டபத்திற்குள் பிரவேசித்து தட்சனும் திருமணத்திற்காக வருகை தந்திருந்த தேவர்கள் அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கும் போதே தாட்சாயணியை அழைத்துச் சென்றுவிட்டார். இதனால் பெருங்கோபமடைந்த தட்சன், சிவபெருமானால் தான் அடைந்த நன்மைகளையும், அவருடைய பெருமையையும் மறந்து அவருடைய திருவிளையாடல்களைப்பற்றி ஏளனமாகப் பேசி அவரை ஏசத் தொடங்கினான்.

தட்சன் தன்னுடைய 27 பெண்களையும் சந்திரனுக்குத் திருமணம் செய்வித்திருந்தான். சந்திரன் 27 பேரிடமும் சமமாக அன்பு செலுத்தவில்லை. அவர்களுள் ரோகிணி என்பவளிடம் மட்டும் தனிப்பட்ட அன்பு காட்டினான். இதனால் வருத்தமடைந்த

சந்திரனின் மற்ற மனைவியர் தங்கள் தந்தையாகிய தட்சனிடம் சென்று தெரிவித்தனர். இதைக் கேட்டுக் கோபமடைந்த தட்சன் சந்திரனுடைய கலைகள் நாளுக்கு நாள் தேய்ந்து மறைய வேண்டு மென்று சாபமிட்டான். மிகவும் கவலையும் மனச் சோர்வும் கொண்ட சந்திரன் சிவபெருமானிடம் சென்று தன்னை தட்சனுடைய சாபத்தினின்றும் மீட்க வேண்டுமென்று முறையிட்டான். அவன் மேல் கருணை கொண்ட சிவபெருமானும் சாபத்தில் ஒரு பகுதியை மீட்டு, அவனைத் தம் சடையில் அணிந்து கொண்டார். எனவேதான் கிருஷ்ண பட்சம் அல்லது தேய்பிறையில் சந்திரனின் கலைகள் படிப்படியாகத் தேய்வதையும் சுக்கில பட்சம் அல்லது வளர் பிறையில் படிப்படியாக வளர்வதை யும் காண்கிறோம். சிவபெருமானுடைய இச்செய் கையால் தட்சன் மேலும் கோபமடைந்தான்.

பிரம்ம தேவன் ஒரு பெரிய வேள்வியைச் செய்து வேள்விகளின் தலைவனாகிய சிவபெருமா னுக்கு அவிர்ப்பாகத்தை அளிப்பதற்கு ஏற்பாடு செய்தான். தட்சனுக்கும் மற்ற தேவர்களுக்கும் அழைப்புகள் அனுப்பப்பட்டன. வேள்விச் சாலையில் தேவர்கள் அனைவரும் கூடி இருந்தார்கள். சிவபெருமான் தமக்குப் பதிலாக நந்திதேவனை வேள்விக்குப் பிரதிநிதியாக அனுப்பியிருந்தார். வேள்விக்கு வந்திருந்த தட்சன் அகந்தையும் கோப மும் அடைந்து, சிவபெருமானுக்கு அவியுணவை அளித்ததற்காகப் பிரம்ம தேவனைப் பழி கூறிய தோடு, சிவபெருமானையும் அவருடைய பிரதிநிதி யாகிய நந்தி தேவனையும் மிகவும் இழிவான முறை யில் பேசத் தொடங்கினான்.

அதைப் பார்த்துக் கொண்டும் கேட்டுக்கொண் டும் இருந்த தேவர்களால் தட்சனை எதிர்த்துப் பேச

எவருக்கும் துணிவில்லை. தட்சன் பேச்சினுல் கோபமடைந்த நந்தி, தட்சன் பல்வேறு வகைகளில் துன்பமடைந்து இறப்பதோடு மோசமான முறையில் மறுபிறவியில் ஓர் ஆட்டின் தலையோடு பிறப்பான் என்றும் சாபமிட்டான். கோழைத்தனமாக நடந்து கொண்டிருந்து தட்சனைக் கண்டிக்காமல் மௌனமாகவிருந்த தேவர்களுக்கும் பல விதங்களில் துன்பமும் சித்திரவதையும் சூரபத்மன், சிம்மமுகன், தாரகன் ஆகிய அரக்கர்களால் ஏற்படும் என்றும் சாபமிட்டான். பின்பு நந்தி தேவன் மிகுந்த கோபத்துடன் யாகசாலையை விட்டு வெளியேறினுன்.

நந்திதேவன் கோபத்துடன் வெளியேறிய பிறகு மகா ஞானியும் தீர்க்கதரிசியுமான ததீசி முனிவர் தட்சனிடம் சென்று சிவபெருமானிடம் அவ்வாறு தகாத முறையில் நடந்துகொள்ள வேண்டாமென்று அறிவுரைகள் கூறினுர். சிவபெருமானுடைய பற்பல கருணை நிரம்பிய செயல்களைப் பற்றியும் திருவிளையாடல்களைப் பற்றியும் கூறினுர். அகந்தையை விட்டொழித்துச் சிவபெருமானிடம் பக்தி செலுத்த வேண்டுமென்றும் அறிவுரைகள் கூறினுர். எல்லாம் விழலுக்கு இறைத்த நீர் போலாயின. இறுதியாக தட்சன் ஒரு வேள்வியைச் செய்வதென்றும், அதற்கு சிவபெருமானை அழைப்பதோ, அவருக்கு அவிர்ப்பாகம் அளிப்பதோ இல்லையென்றும் முடிவு செய்தான்.

ஹரித்வாரத்திலுள்ள கன்கல் என்னுமிடத்தில் கங்கைக்கரையில் மிகப் பெரிய வேள்வி ஒன்றை நடத்துவதற்கான ஏற்பாடு செய்யப்பட்டது. வேள்விச்சாலைக்கு வருபவர்களை வரவேற்பதற்காக விரிவான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. சிவபெருமான் ஒருவர்தான் வேள்விக்கு அழைக்கப்படவில்லை. அச்சமயம்; சிவபெருமானுடன் கைலயங்

கிரியிலிருந்த தாட்சாயணி தன் தகப்பஞர் வேள்விக்கான ஏற்பாடுகள் செய்வதைப்பற்றிக் கேள்விப்பட்டாள். சிவபெருமானின் விருப்பத்திற்கு மாருக, அந்த சிறப்பான விழாவுக்குச் செல்லவேண்டுமென்ற இயற்கையான ஆவலின் காரணமாக, வேள்வி நடந்துகொண்டிருந்த கன்கல் என்னுமிடத்துக்கு விரைந்து சென்ருள்.

ஆனால் அவள் தகப்பஞரிருந்த இடத்தில் அவளை யாரும் வரவேற்கவில்லை. மாருக அவள் தந்தையும் அவனைச் சார்ந்தவர்களும் அவளை வெளிப்படையாகவே திட்டத் தொடங்கிஞர்கள். தாட்சாயணிக்கு ஏற்பட்ட இந்த இழிவான நிலை சிவபெருமானுக்கு எட்டியது. அவர் வீரபத்திரக் கடவுளை அழைத்து வேள்வி முழுவதையும் அதில் பங்குகொண்டவர்களையும் அடியோடு அழித்துவிட்டு வருமாறு ஆணையிட்டார். வீரபத்திரரும் விரைந்தோடி மிக்க கோபத்துடன் வேள்விக்காகச் செய்யப்பட்டிருந்த ஏற்பாடுகள் அனைவற்றையும் தூள் தூளாக நொறுக்கிஞர். வந்திருந்த அனைவரும் அவர் கோபத்துக்காளாயினர். மன்னிப்புக் கேட்டுக் கொண்டவர்களை மட்டும் தப்பியோடச் செய்தார்.

இந்த அழிவுச் செயல் நடந்து கொண்டிருக்கும் போதே சிவபெருமான் தேவர்கள்முன் தோன்றிஞர். தாட்சாயணியின் வேண்டுகோளுக்கிணங்க இறந்தவர்கள் அனைவரையும் உயிர்ப்பித்தார். சிறிதுகாலம் கழிந்தபின், தன் தந்தையாகிய பிரம்மதேவனின் அறிவுரைக்கிணங்க, தட்சன் வாரஞசிக்குச் சென்று சிவபெருமானுடைய அருளை வேண்டித் தவம் செய்தான். சிவபெருமான் தட்சன் முன் தோன்றி அவனைத் தம் பூதகணங்களின் தலைவர்களுள் ஒருவஞகச் செய்தார்.

## 3. நந்தியின் சாபம்

அசுரர்களின் அரசனான அகிரசேனன் என்பவனுக்கு சுரசை என்ற ஒரு மகளிருந்தாள். தேவர்களிடம் தோற்றுப்போன அசுரர்கள் தேவர்கள்மீது பழி தீர்த்துக்கொள்வதற்காக அசுர குருவாகிய சுக்ராச்சாரியார் சுரசைக்கு மாய வித்தைகள் அனைத்தையும் கற்பித்தார். சுரசை மாய வித்தையில் மிகவும் தேர்ச்சி பெற்றதால் அவள் 'மாயை' என்றே பெயர் பெற்றது மிகவும் பொருத்தமாக இருந்தது. அசுரர்கள் இழந்த புகழை மீண்டும் பெறுவதற்காக, மிகப்பெரிய முனிவர்கள் மூலம் மக்களைப் பெற்றால் அவர்களும் அவர்கள் மக்களும் தேவர்களைவிட மிகவும் வலிமை நிறைந்தவர்களாக இருப்பார்கள் என்று மாயை எண்ணி காச்யப முனிவர் கோரமான தவம் செய்துகொண்டிருந்த இடத்திற்குப் போய்ச் சேர்ந்தாள்.

தன்னுடைய மாயா வித்தையால் அந்தக் காட்டில் அழகான மலர் வனங்களைத் தோற்றுவித்து அதில் அழகான உருவம் எடுத்துக்கொண்டு ஆடிப்பாடி மகிழ்ந்துகொண்டிருந்தாள். இந்த இடையூறினால் தவம் கலைந்து தியானத்திலிருந்து விழித்தபோது தம் எதிரே அழகிய பெண்ணைக் கண்டார். அவளுடைய மாய மந்திரங்களின் காரணமாக அவளுடைய அழகில் மயங்கிய முனிவர் எளிதில் அவள் வசப்பட்டு அவள் அழகுக்கு அடிமையானார். முனிவரும் மாயையும் வனங்களில் மகிழ்ச்சியுடன் அலைந்து திரிந்து பல நாட்களைக் களிப்புடன் கழித்தனர். மாயைக்கு முனிவரிடம் மூன்று ஆண் குழந்தையும் ஒரு பெண் குழந்தையும் பிறந்தனர். ஆண் மக்கள் முறையே சூரபத்மன், சிம்மமுகன், தாரகாசுரன் என்றும் பெண் குழந்தை அஜமுகி என்று பெயர் பெற்றாள். சிம்மமுகனுக்குச்

சிங்கத்தின் தலையும், தாரகாசுரனுக்கு யானையின் தலையும், அஜமுகிக்கு ஆட்டின் தலையும் இருந்தன. இவர்களைத் தவிர, இவர்களோடு சேர்ந்து தேவர்களுடன் போர் செய்வதற்காக ஒரு பெரிய அசுர சேனையே தோன்றியது.

இள வயதில் சூரபத்மனும் அவன் சகோதரர்களும் தம் தந்தையாரை அணுகி பேரும் புகழும் சேர்ந்த வாழ்வைப் பெற தாங்கள் செய்ய வேண்டிய காரியங்களுக்கு ஆலோசனை கேட்டனர். அறத்தோடு கூடிய நல்ல வாழ்க்கையுடன் இறைவனிடம் குறையாத தீவிர பக்தியுடன் கடும் தவம் செய்யச் சொல்லி அறிவுரை கூறினார். மார்க்கண்டேயன் எவ்வாறு இறைவனிடம் செலுத்திய தீவிர பக்தியின் காரணமாக எமனுடைய பிடியிலிருந்தே சிவ பெருமான் அருளால் தப்ப முடிந்தது என்பதை எடுத்துச் சொன்னார்.

ஆனால் மாயையோ, தன்னுடைய நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ள வேண்டி, இந்த அறிவுரைகளை ஏற்றுக்கொள்ளவில்லை. சிவபெருமானை நோக்கி கடும் தவமியற்றி, அவரிடம் வலிமை பொருந்திய வரங்களைப் பெற்று தேவர்களை வென்று அடிமைப்படுத்தி ஆட்சி செய்து பெயரும் புகழும் பெற்று மகிழ்ச்சியுடன் வாழ வேண்டுமென்று வேண்டிக் கொண்டாள்.

சில காலம் கழித்து காச்யப முனிவர் தாம் மாயையின் வலையில் வீழ்ந்து அவள் வயப்பட்டதை நினைந்து வருந்தி அவர்களை விட்டுப் பிரிந்து தம் வழியே மீண்டும் தவத்துக்குப் போனார். தாயார் அறிவுரைப்படி சூரபத்மனும் அவன் சகோதரர்களும் கடுமையான தவம் செய்ய வேண்டி வடக்கு நோக்கிச் சென்றார்கள். தவம் செய்வதற்கு

வேண்டிய ஏற்பாடுகள் எல்லாவற்றையும் மிகவும் கவனமாகச் செய்து கொண்டு, தங்கள் தவத்தைத் தொடங்கினார்கள்.

அநேக அண்டுகளுக்குப் பிறகும் எந்தவிதமான பலனும் ஏற்படவில்லை. சூரபத்மனும் அவன் சகோதரர்களும் தங்கள் தவத்தைக் கடுமையாக அனுஷ்டிக்கத் தொடங்கினார்கள். தங்கள் உடலுறுப்புக்களை ஒவ்வொன்றாக வெட்டி தங்களுக்கு முன்னேயிருந்த வேள்வித் தீயில் இட்டனர். அப்பொழுதும் சிவபெருமான் அவர்களுக்கு முன்னே தோன்றவில்லை. இறுதியாக சூரபத்மன் தானே வேள்வித் தீயில் வீழ்ந்து தன் உயிரைத் தியாகம் செய்துகொண்டான். மற்றவர்களும் அவ்வாறே செய்வதற்குத் தயார் செய்து கொண்டிருக்கும்போது சிவபெருமான் அவர்கள் முன்னே தோன்றி, சூரபத்மனை உயிர்ப்பித்து அவர்கள் வேண்டிக்கொண்டபடியே அநேக வரங்களைத் தந்து மறைந்தார்.

தங்கள் நோக்கங்கள் நிறைவேறியதும் அவர்கள் தங்கள் தாயாரிடம் வெற்றியோடுகூடிய மகிழ்ச்சியுடன் வந்தார்கள். தாயாரும் மிகவும் உற்சாகத்துடன் வரவேற்றாள். மேலும் தேவையான ஆலோசனைகளைப் பெறுவதற்காக, அவர்களை அசுர குருவாகிய சுக்கிராச்சாரியாரிடம் அனுப்பினாள்! அவர்கள் மிகவும் புலனின்ப வசப்பட்ட ஆடம்பரமானதுமான வாழ்க்கையை நடத்துவதற்குரிய வழிகளைச் சுக்கிராச்சாரியார் கூறினார். மேலும் அவர்களிடம் கீழ்க்கண்டவாறு சொல்லத் தொடங்கினார். ''எல்லா விஷயங்களும் மிகவுயர்ந்த பரம்பொருளால் நடைபெறுகின்றன. பரம்பொருள் எங்குமிருக்கிறார்'' என்று சொல்லுவது எல்லாம் அபாண்டமான பொய். உலகிலுள்ள

செடி கொடிகள், பிராணிகள் எல்லாவற்றையும் மனிதனுடைய வசதிக்காகவும் இன்பத்துக்காகவும் இறைவன் படைத்திருக்கிறுர். வலிமைதான் பெரிது. ''எப்பொழுதும் நல்லனவற்றையே செய்; தீயனவற்றை விலக்கிவிடு என்ற ஆடம்பரமான உபதேசங்களால் எவருக்கும் எந்த நன்மையும் ஏற்படாது.''

''இறைவனுடைய திருவிளையாடல்கள் என்று சொல்லப்படுவன எல்லாம் கனவில் வரும் மனிதர்களையும் செயல்களையும் போன்றது. இறைவனின் படைப்பில் அனைவரும் சமம். சில ஞானிகளையும் சாதுக்களையும் ஆதரித்து மற்றவர்களை அஞ்ஞானிகள் என்றும் பாவிகள் என்றும் கூறுவதுபோன்ற அநியாயமும் ஒருதலைபட்சமான செயலுமாகும். இறைவன் உங்களுக்கு எல்லாவிதமான வரங்களையும் வழங்கியுள்ளதால் நீங்கள் தக்கமுறையில் அவைகளைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். உங்களுக்கு அளவுகடந்த ஆற்றல் கிடைத்துள்ளது. உங்களால் ஆக்கவும் அழிக்கவும் முடியும். எனவே உங்கள் தாயாகிய மாயை நீண்டகாலமாக நீங்கள் செய்யவேண்டுமென்று மனதில் ஏக்கத்துடன் வைத்திருக்கும் செயலைச் செய்துமுடிப்பதற்கு விரைவில் புறப்படுங்கள். தேவர்களைப் போருக்கழைத்து அவர்கள் அதிகாரங்களைப் பறித்துக்கொள்ளுங்கள். அவர்களுடைய செல்வத்தையும் புகழையும் பறித்துக்கொள்ளுங்கள். அவர்களை உங்களுக்கு அடிமைப்படுத்திக்கொண்டு ஆட்சி செலுத்துங்கள்.

''நீங்கள் இன்பம் அனுபவிப்பதற்கு எந்தெந்த பொருள்கள் தேவை என்று கருதுகின்றீர்களோ அவைகளைப் பயன்படுத்திக்கொண்டு, உல்லாசமானதும் கவலையற்றதுமான வாழ்க்கையை நடத்துங்கள். நன்ருக உண்ணுங்கள்; குடியுங்கள்,

மகிழ்ச்சியோடிருங்கள். ஆடம்பரமாக வாழுங்கள். சிவபெருமானால் படைக்கப்பட்டுள்ள எல்லா உலகங்களின்மீதும் ஆட்சிசெலுத்துங்கள். அவர்கள் மீது ஆட்சி செலுத்துவதோடு அந்தந்த நாடுகளில் பின்வரும் சந்ததியினர்மீது ஆட்சி செலுத்த உங்கள் பரம்பரையை ஏற்படுத்தவேண்டும். அப்போதுதான் அசுர குலத்தின் புகழையும் பெருமையையும் மீண்டும் நிலைநாட்ட முடியும்'' இம்மாதிரியான உணர்ச்சியூட்டக்கூடியவையும் தீயவையாகத் திரித்துக் கூறப்பட்டவையுமான சொற்களால் சூரபத்மன், சிம்மமுகன், தாரகாசுரன் ஆகிய மூவருக்கும் சுக்கிராச்சாரியார் அறிவுரை கூறினார்.

தங்களுடைய குருமகராஜின் முடிவான ஆலோசனைகளையும் ஆசிகளையும் பெற்றுக்கொண்ட சூரபத்மனும் சகோதரர்களும் தேவர்களோடு போரிட்டு அவர்களை வெல்லும் செயலைத் தொடங்கினார்கள். தென்திசையில் மகேந்திரபுரி என்னுமிடத்தில் சூரபத்மன் தன் தலைநகரை ஏற்படுத்திகொண்டான். சிம்மமுகன் வடக்கிலுள்ள அசுரம் என்னுமிடத்தில் தன் தலைநகரை நிறுவினான். தாரகாசுரன் ஏமகூடம் என்னுமிடத்தில் தன் தலைநகரத்தைக் அமைத்துக் கொண்டான். தெய்வத் தச்சனை விசுவகர்மா இந்த மூன்று நகரங்களையும் தக்க முறையில் திட்டமிட்டு அமைத்துக் கொடுத்தான். மூன்று சகோதரர்களும் தத்தம் தலைநகரங்களைச் சுற்றிலும் தங்கள் இராச்சியங்களை அமைத்துக்கொண்டு, தேவர்களும் அஞ்சி நடுங்கும்படி பயங்கரமாக ஆட்சி செலுத்தி வந்தார்கள்.

தங்களுடைய மிகப் பரந்த இராச்சியங்களை ஆள்வதோடு திருப்தி அடையாமல், மூன்று சகோதரர்களும் தேவர்களுடைய ஆதிக்கத்தை வென்று அவர்

களை அடிமையாக்கி ஆளவேண்டுமென்ற நோக்கத்துடன் தேவலோகத்திற்குச் சென்றார்கள். சூரபத்மன் தேவலோகத்தை வென்று தேவேந்திரனைச் சிறை பிடித்து தன் தலைநகரில் செம்படவனுக மீன் பிடிக்கும் பணியைச் செய்யச் செய்தான். பிரம்ம தேவனைப் புரோகிதராகப் பணியாற்றச் செய்தான். காற்றுக்கு அதிபதியான வாயுதேவனைத் தன் தலை நகரிலுள்ள தெருக்களைப் பெருக்கச் செய்தான். தலைநகரிலுள்ள தெருக்களில் எழும்பும் புழுதியை அடக்குவதற்காக வருணதேவனை நீர்த் துளிகளைத் தெளிக்கச் செய்தான். சூரியனைத் தன் மகன் பானு கோபனுக்கு விளையாட்டுக் கருவியாகக் கொடுத்தான். திருமாலைமாத்திரம் ஒன்றும் செய்யாமல் விட்டுவிட்டான். இம்மாதிரியாக சூரபத்மனும் அவன் சகோதரர்களும் தேவர்கள் அனைவரையும் மிகவும் மோசமான முறையில் துன்புறுத்தி அவமதித்தார்கள். இந்த மாதிரி தேவர்கள் அனைவரும் துன்பப்பட்டதற்குக் காரணம் — தட்சன் சிவபெருமானைத் தூற்றிப் பேசியபோது அவர்கள் கோழைத்தனமாக மௌனமாக இருந்ததுதான் காரணம். நந்தி தேவனின் சாபம் பலித்துவிட்டது.

## 4. அசுரர்களின் கொடுமை

தன்னுடைய கடும் அகம்பாவத்தின் காரணமாக சூரபத்மன், இந்திரலோகத்தைப் பிடித்து தேவேந்திரனையும் அவன் மனைவியாகிய இந்திராணியையும் சிறைபிடித்து வருமாறு தன் மகன் பானு கோபனை அனுப்பினுன். அசுரர்களின் சேனை இந்திர லோகத்திற்குள் நுழைந்து, நகரத்தைக் கொள்ளையடித்தது. சித்திரவதைகளைப் பொறுக்க முடியாமல், தேவேந்திரனும் இந்திராணியும் கிளிகளின் உருவமெடுத்துக் கொண்டு பறந்தோடி, தென்னிந்தியாவிலுள்ள சீர்காழி என்னும் ஊரில் இருந்தனர். ஆனல் இந்திரனுடைய மகனுன

ஜெயந்தன் மகேந்திரபுரிக்குக் கொண்டு வரப் பட்டுச் சிறையிடப்பட்டான். கிளிகளின் உருவத் திலிருந்த இந்திரனும் இந்திராணியும் அசுரர்களின் கொடுமையிலிருந்து தங்களை விடுவித்து தங்கள் அரசை மீட்டுக் கொடுக்குமாறு சிவபெருமானை வேண்டிக்கொண்டார்கள். சிறிது காலம் கழித்து, இந்திராணியை மகாசாஸ்தாவின் பாதுகாப்பில் விட்டு விட்டு, அசுரர்களின் இரக்கமற்ற கொடுமை யிலிருந்து தங்களைப் பாதுகாக்குமாறு சிவபெரு மானைக் வேண்டிக் கொள்வதற்காகத் தேவேந்திரன் மற்ற தேவர்களையும் அழைத்துக்கொண்டு கைலையங் கிரிக்குப் போனான். அவனில்லாத போது, சூரபத் மனின் சகோதரியான அஜமுகி, இந்திராணியைத் தன்னுடைய மாயையால் கவர்ந்து சூரபத்மனிடம் எடுத்துச் செல்ல முயற்சி செய்தாள். ஆனால் அவ் வாறு முயலும் போது இந்திராணிக்குக் காவலா யிருந்த மகாசாஸ்தா அஜமுகியை வெட்டி காயப் படுத்தினான். பதவி வெறியால் மதிமயக்கமுற்ற சூரபத்மன் இதைக்கேட்டு, தேவர்களைச் சவுக்கால் அடித்தும் மேலும் இரக்கமின்றிக் கொடுமைப் படுத்தினான்.

அதே சமயத்தில் சிவபெருமானின் ஆணையின் படி அகஸ்திய முனிவர், தன் கமண்டலத்தில் ஆகாய கங்கையின் தீர்த்தத்துடன் தென்திசை நோக்கி வந்துகொண்டிருந்தார். வழியில் மலையின் உருவத் துடனிருந்த இரவுஞ்சன் என்ற ஓர் அரக்கன் சென்றுகொண்டிருந்த அவரை மயக்கப்பார்த்தான். அரக்கனுடைய சூழ்ச்சியை உணர்ந்துகொண்ட முனிவர் கார்த்திகேயப் பெருமான் வந்து அவனை அழிக்கும் வரை அவன் மலையாகவே இருக்க வேண்டு மென்று சபித்தார். அதன் பின்னர் அகஸ்தியர் தன் பிரயாணத்தைத் தொடர்ந்து, விந்திய மலையைக் கடந்து தென்னிந்தியாவை அடைந்தார். ஒருநாள்

அவர் வேறு பக்கம் கவனமாக இருக்கும்போது, ஒரு காகம் அவருடைய கமண்டலத்தைக் கவிழ்த்து அதிலிருந்த நீரைக் கீழே கொட்டிவிட்டது. இதனால் கோபமடைந்த முனிவர் அந்தக் காகத்தின் தலையில் தட்டினார். ஆனால் உடனே தன் முன்னர் விநாயகப் பெருமான் நிற்பதைக் கண்டு வியந்தார். அந்தப் பெருமானின் அருளால் கீழே சிந்திய தண்ணீர், காவிரி நதியாகப் பாய்ந்து தென்கிழக்கே ஓடி இந்திரனும் அவன் தேவியும் சிவபெருமானின் அருளை வேண்டி வழிபட்டுக் கொண்டிருந்த இடத்தின் அருகே ஓடிச்சென்றது.

அதன் பின்னர் அகஸ்திய முனிவர் அஜமுகியின் இரண்டு குமாரர்களான வில்வலன், வாதாபி என்ற இரு அரக்கர்களையும் கொன்றார். காட்டில் வசித்து வந்த அந்த இருவரும் அவ்வழியே செல்லும் அப்பாவிகளான வழிப்போக்கர்களைத் தங்கள் வீட்டுக்கு விருந்துக்கு அழைப்பது வழக்கம். அந்த மாதிரி சமயங்களில் வில்வலன், வாதாபியை துண்டு துண்டாக வெட்டி அவன் இறைச்சியாலான உணவை விருந்தாளிக்குப் படைப்பான். விருந்தாளி உண்டு முடித்ததும், வில்வலன் தன் சகோதரனாகிய வாதாபியைப் பெயர்ச் சொல்லி அழைப்பான். வாதாபி பின் வயிற்றைக் கிழித்துக் கொண்டு உயிரோடு வெளியில் வருவான். பிறகு இரண்டு அரக்கர்களும் அந்த அப்பாவியான விருந்தாளியின் உடலைச் சாப்பிட்டு விடுவார்கள். ஆனால் அகஸ்தியர் இதை முன்னரே யூகித்து அறிந்துகொண்டு, தன் வயிற்றை மெதுவாகத் தடவி விட்டுக்கொண்டு ''வாதாபி ஜீரணமடைவானாக'' என்று சொன்னவுடன், வாதாபி மீண்டும் உயிரோடு அவர் வயிற்றைக் கிழித்துக்கொண்டு வெளியே வரமுடியாமல் ஒழிந்து போனான். அகஸ்தியர் வில்வலனையும் கோபத்துடன் கொன்றொழித்தார்.

சூரபத்மனும் அவன் சகோதரர்களும் செய்த சித்திரவதையால் மிகவும் துன்பப்பட்டுக் கொண்டிருந்தார்கள். நாட்கள் செல்லச் செல்ல அவர்கள் துன்பம் அதிகரித்துக் கொண்டே போயிற்று. இனியும் பொறுக்க முடியாது என்ற நிலையில் பிரம்மா, விஷ்ணு, இந்திரன் மற்ற தேவர்களும் உடனடியாகத் தங்கள் பாதுகாப்பும், விடுதலையும் வேண்டிப் பிரார்த்தித்துக் கொள்வதற்காகச் சிவபெருமானை நோக்கிக் கயிலாய மலைக்கு போனார்கள்.

## 5. பிறப்பும் இளமைப் பருவமும்

திருமாலும், பிரம்மாவும், இந்திரனும் மற்ற தேவர்களுடன் சிவபெருமானிடம், சென்று கொண்டிருக்கையில், சனகர், சனத்குமாரர், சனந்தனர், சனந்தனர் என்ற நான்கு மகாமுனிவர்களும் சிவபெருமானிடம் வந்திருந்தனர். யமம், நியமம், யோகம், சமாதி ஆகிய நால்வகை நெறிகளின் உதவியோடு ஆன்மீகத் தெளிவு பெறுவது எப்படி என்பதை பற்றிய அறிவுரைகளை கேட்பதற்காக அவர்கள் வந்திருந்தார்கள். தாமே சமாதி நிலையிலிருப்பதன் மூலமாக இந்த நால்வகைப்பட்ட நெறிக்களுக்கான விவரங்களை அவர்களுக்கு விளக்கினார். முற்றிலும் மௌன விரதத்துடன் சமாதி நிலையில் சிவபெருமான் அமர்ந்திருந்தார். அதாவது இறுதி நிலையாகிய சமாதி நிலையைப் பற்றி விளக்கிச் சொல்வதைவிட தாமே அதை அனுசரிப்பதுதான் அதை விளங்கிக் கொள்வதற்குரிய சிறந்த நெறியுமாகும் என்று சொல்லாமல் விளக்கினார்.

இந்த நெருக்கடியான சூழ்நிலையில் தேவர்களும் இந்திரனும், பிரம்மாவும், விஷ்ணுவும் கைலயங்கிரியில் நுழைய முயன்றபோது நந்திதேவர் அவர்

களைத் தடுத்து நிறுத்தினார். தேவர்கள் ஏமாற்றத்துடன் திரும்பி, என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்தார்கள். எல்லோரும் கூடி ஆலோசனை செய்து ஏதாவதொரு வழியைக் கண்டுபிடிக்க முயன்றார்கள். சிவபெருமானுடைய அருளும் உதவியுமில்லாமல், அசுரர்களுடைய கொடுமையினின்றும் தப்ப முடியாது என்று அவர்களுக்கு உறுதியாகத் தெரியும். ஆனால் அந்த அருளையும் உதவியையும் பெறுவதற்குரிய வழி ஒன்றுதான் அவர்களுக்குப் புலப்படவில்லை. அதே சமயத்தில் சிவபெருமானை அணுகி அவருடைய தியான நிலையைக் கலைப்பதற்கும் அவர்களுக்குத் தைரியமில்லை. எனவே எதுவும் செய்ய முடியாத நிலையில் திகைத்து நின்றார்கள்.

காதல் கடவுளான மன்மதனை அனுப்பி சிவபெருமானை யோக நித்திரையினின்றும் எழுப்பலாமென்று பிரம்ம தேவன் ஆலோசனை கூறினார். மன்மதன் முதலில் மறுத்தாலும்; தேவர்கள் அனைவரின் வேண்டுகோளுக்கும் இணங்கிச் சிவபெருமான் இருக்குமிடம் சென்றான். மன்மதன் தன் மலர்க்கணைகளை எய்தி சிவபெருமானை மகா மௌனத்தினின்றும் எழுப்பினான். அவர் மௌனநிலைக்கு இடையூறு ஏற்பட்டவுடன், சிவபெருமான் கண்விழித்துப் பார்த்தபோது, அவர் நெற்றிக்கண்ணிலிருந்து அளவிடமுடியாத ஒளியுடனும், வெப்பத்துடன் சுடரொளி வீசிக்கொண்டு வெளிப்பட்ட தீப்பொறிகள் மன்மதனை எரித்துச் சாம்பலாக்கிற்று. இதைக் கண்ட தேவர்கள் மேலும் அஞ்சி நடுங்கினார்கள். அவர்கள் ஓடிச் சென்று சிவபெருமானின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி அந்தத் தீச்சுடரிலிருந்தும் அசுரர்களின் கொடுமையிலிருந்தும் தங்களைக் காக்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டார்கள். இறைவனும் அவர்கள்மீது இரக்கம் கொண்டு அவர்களைப்

பாதுகாப்பதாக உறுதி கூறினார். அம்மாதிரியே இரதி தேவியின் வேண்டுகோளுக்கிணங்கி மன்மதனை மீண்டும் உயிர்ப்பித்தார். ஆனால் அவளுக்கு மட்டும் தெரியுமாறும் மற்றவர் கண்களுக்கு தெரியமாட்டாது என்றும் சொன்னார். சிவபெருமானுடைய உறுதி மொழியைக் கேட்டு அச்சம் நீங்கிய தேவர்கள் தாங்கள் விடுதலைபெறும் நாளை எதிர்பார்த்துக் கொண்டு கைலைமலையை விட்டு புறப்பட்டார்கள்.

இமவானின் புத்திரியாக அவதரித்திருந்த பார்வதி, சிவபெருமானையே கணவனாக அடைய விரும்பிக் கடுமையான தவம் செய்து கொண்டிருந்தாள். இறைவன் அவளுடைய தவத்தைக் கண்டு மகிழ்ந்து அவள் முன்னே ஒரு வேடன் உருவத்தில் தோன்றினார். அவளுடைய தூய்மையையும், உறுதியையும் சோதனை செய்த பின்னர், தான் யாரென்று வெளிப்படுத்திக்கொண்டு, கூடிய விரைவில் வந்து அவளைத் திருமணம் செய்து கொள்வதாக உறுதிகூறிச் சென்றார். மலைகளின் அரசனான இமவான் திருமணத்துக்கான ஏற்பாடுகளைச் செய்தான். மிகவும் விமரிசையாகவும் ஆடம்பரமாகவும் தக்க முறையில் திருமணம் நடைபெற்றது. சிவபெருமான் பார்வதி தேவியுடன் திருக்கயிலாயத்திற்குச் சென்றார்.

சிலநாட்களுக்குப் பிறகு, தேவர்கள் இறைவனிடம் சென்று, தங்களை அசுரர்களின் அடிமைத் தளையிலிருந்து அவர் மீட்பதாக வாக்குறுதி அளித்திருந்ததை நினைவூட்டினார்கள். அவர்களுக்கு உதவுவதன் பொருட்டு, அவர் ஆறுமுகங்களோடு கூடிய தம் உண்மையான உருவத்தை எடுத்துக் கொண்டார். ஒவ்வொரு முகத்திலிருந்தும் ஒரு தெய்வீகத் தீப்பொறி வெளிப்பட்டது. இதன் பிரகாசமும் வெப்பமும் மிகவும் அதிகமாக இருந்ததால் தேவர்கள் மேலும் துன்பப்பட்டார்கள்.

இறைவன் வாயு தேவனையும் அக்னி தேவனையும் அழைத்து அந்த ஆறு தீப்பொறிகளையும் எடுத்துச் சென்று புனிதமான கங்கை நதியில் விடும்படிக் கட்டளை இட்டார். அப்பொழுது கங்கை நதியானவள் அவற்றைச் சரவணப்பொய்கை என்னும் குளத்தில் விட்டுவிடுவாள் என்றார். வாயுவும் அக்கினியும் அவ்வாறே அவர் ஆணைக்குக் கீழ்படிந்து கங்கை நதியில் தீப்பொறிகளை விட்டனர். இறைவனருளால் கங்கை நதியிலிருந்து தீப்பொறிகள் சரவணப்பொய்கையை அடைந்தன. சரவணப் பொய்கையை அடைந்தவுடன் ஆறு தீப்பொறிகளும் அழகான ஆறு குழந்தைகளாக மாறின. ஒவ்வொரு குழந்தையும் ஒரு தாமரை மலரின்மேல் படுத்திருந்தது. அவற்றைக் கார்த்திகைப் பெண்கள் தாலாட்டினர். இந்த அவதார மகிமையைக் காண பரமசிவனும் பார்வதியும் அனைத்து தேவர்களும் சரவணப்பொய்கைக்கு விரைந்து ஓடினர். பார்வதிதேவி அளவிடமுடியாத தாயன்புடன் ஆறு குழந்தைகளையும் எடுத்து மார்போடு அணைத்துக் கொண்டு 'ஸ்கந்தன்' என்று பெயரிட்டழைத்தாள். ஆனால் அதிசயப்படத்தக்க வகையில், வெவ்வேறாக இருந்த ஆறு குழந்தைகளும், ஆறு முகங்களும், பன்னிருகரங்களுடைய ஒரே தெய்வீகக் குழந்தையாக மாறிற்று. எனவே அக் குழந்தை 'ஷண்முகன்' (ஆறுமுகங்களை உடையவன்) எனப் பெயர் பெற்றது. கார்த்திகைப் பெண்களால் பாலூட்டி வளர்க்கப்பட்டதால் கார்த்திகேயன் என்னும் பெயர் பெற்றான். எனவே துன்பப்பட்டுக் கொண்டிருந்த தேவர்கள் மனம்மகிழ, இறைவனே நல்லவர்களைக் காத்து தீயவர்களைத் தண்டிக்க ஷண்முகனாக அவதாரம் செய்தார். மலர் கொடிகள் நிறைந்த குளத்தில் பிறந்ததால் ''சரவணபவன்'' என்னும் பெயர் பெற்றான். அவனோடு தெய்வீக வீரர்கள் ஒன்பதுபேர் தோன்றினார்கள். அவர்களின்

தலைவன் வீரபாகு என்னும் பேருற்றவன். இந்த ஒன்பது வீரர்களும் கந்தன் அசுரர்களுடன் செய்யும் போரில் அவனுக்கு உதவி செய்வார்கள்.

இளம் பாலகனாக இருக்கும்போதே ஷண்முகன் தன் அளவற்ற ஆற்றலையும் வீரத்தையும் வெளிப் படுத்தி இருக்கிறான். அவன் ஆற்றலையும் வீரத்தை யும் கண்ட தேவர்கள், வலிமைபொருந்திய சூர பத்மனாகிய அசுரனுடன் போரிட்டு வெல்லக்கூடிய சேனையை நடத்திச் சென்று தங்களைக் காப்பாற்று வதற்குரிய மிகச்சிறந்த தலைவன் அவன்தான் என்ற உறுதியோடு இருந்தார்கள். ஒருநாள் கந்தன் மலைச்சரிவுகளில் ஓடிவிளையாடிக்கொண்டிருந்தான். அப்பொழுது சில தேவர்கள் அவனை ஒரு சாதாரணக் குழந்தையாக எண்ணி அவனுடைய உண்மையான பெருமையை மறந்து அவனை விளையாட்டாகச் சண்டைக்கு அழைத்தார்கள். இறுதியாக இந்திரன் தன்னுடைய சேனையையே அணிவகுத்துக்கொண்டு கந்தனுடன் போரிட்டுத் தோற்றுப்போய், கொல்லப்படும் நிலை ஏற்பட்டு விட்டது. பிறகு நாரதரின் குறுக்கீட்டினால், தேவர்கள் தங்களைக் காப்பாற்றவேண்டிய இறைவனிடமே தாங்கள் போரிட்ட தவறுக்காக வருந்தி மன்னிப்பு கேட்டார் கள். அவர்கள்மேல் இரக்கம் கொண்ட இறைவன், இறந்துபோன தேவர்களை உயிர்ப்பித்து எழுப்பினார்.

ஒரு சமயம் ஆட்டுத்தலை படைத்த அரக்கன் ஒருவன் கொடுமையுடன் பயங்கரமாக தேவர்களை அழித்துக் கொண்டிருந்ததைக் கந்தன் கேள்விப் பட்டான். உடனே அவனிருக்குமிடம் தேடிச் சென்று, அவனோடு போரிட்டு அவனுடைய கொம்பு களைப் பிடித்து முறுக்கினான். இறுதியில் அவன்மேல் இரக்கம் கொண்டு அவனையே தன் வாகனமாக்கிக் கொண்டான்.

மற்ளெருரு சமயம் பிரம்மனும், திருமாலும் மற்ற தேவர்களும் சிவபெருமானை தரிசிப்பதற்காக கயிலாய மலைக்கு வந்தார்கள். திரும்பிச் செல்லும் போது ஷண்முகனைக் கண்டு அவனுக்கும் தங்கள் வணக்கத்தைச் செலுத்திஞர்கள். ஆனுல் பிரம்ம தேவன் மாத்திரம் தான் படைக்கும் கடவுள் என்ற உயர்ந்த நிலையிலுள்ளவன் என்ற கர்வத்தின் காரண மாக ஷண்முகனை வணங்கி மரியாதை செய்ய மறுத்துவிட்டார். கார்த்திகேயன் இதைப் பார்த்து, கோபமடைந்து, பிரம்மதேவனைத் தன்னுடைய மண்டபத்திற்குள் அழைத்து மற்ற தேவர்களுடன் அமரச். செய்தான். பிறகு பிரம்மதேவனிடம் அநேக கேள்விகள் கேட்டான். பிரம்மனும் பதில் சொன்ஞன். கடைசியில் கார்த்திகேயன் பிரம்ம தேவனைப் பார்த்து, ''ஓம்'' என்னும் பிரணவ மந்திரத்துக்குப் பொருள் சொல்லுமாறு கேட்டான். பிரம்மனுக்குச் சரியான முறையில் சொல்லத் தெரிய வில்லை. இதனுல் மற்றவர்களுக்கு முன்ஞல் பிரம்ம தேவனுடைய அறியாமையை விளக்கிக் காட்டி விட்டு, அவனுடைய கர்வத்தை அடக்குவதற்காக அவனைச் சிறையிலிட்டான். படைப்புத் தொழிலை யும் தானே மேற்கொண்டான். தேவர்கள் சிவ பெருமானிடம் சென்று விஷயத்தைக்கூறி பிரம்ம தேவனை விடுதலை செய்ய ஆவன செய்யுமாறு வேண்டிக்கொண்டார்கள். சிவபெருமானும் தேவர் களுடன் கந்தனுடைய இருப்பிடத்திற்குச் சென்று பிரம்மதேவனை விடுவிக்கும்படிக் கேட்டுக்கொண் டார். பிரபஞ்சத்தில் படைக்கும் தொழிலில் ஈடுபட்டுள்ள தேவன் ஒருவனுக்கே பிரணவப் பொருள் சரிவர விளங்கவில்லை. எனவே அவனைச் சிறையிலிருந்து விடுவிக்க முடியாதென்று மறுத்த போதிலும் தந்தையின் விருப்பத்துக்கு அடி பணிந்து பிரம்மதேவனை விடுவித்தான். பின்னர் சிவபெருமான் சண்முகப் பெருமானையே பிரணவப்

பொருளை விளக்கிச் சொல்லுமாறு விளையாட்டாகக் கேட்டார். ஷண்முகன் சவாலை ஏற்றுக்கொண்டு, தன் தகப்பனாரையே சீடனாகவும் தானே குரு வாகவும் இருந்து பிரணவத்தின் பொருளை மிகவும் தெளிவாகவும் விளக்கமாகவும் எடுத்துரைத்தார். அந்த விரிவான விளக்கத்தைக் கேட்ட சிவ பெருமான் மனமகிழ்ச்சி அடைந்ததோடு, ஞான மூர்த்தியான தன் மகன் சொன்ன விளக்கவுரையைக் கேட்டு, பிரணவப் பொருளின் மிகவுயர்ந்த தன்மையைத் தாமே உணர்ந்தார்.

சில நாட்களுக்குப் பிறகு சிவபெருமான் தம் குமாரனை அசுரர்களை எதிர்த்துப் போரிடுவதற்குத் தயார் செய்ய விரும்பினார். எனவே அவனை அழைத்து ஆற்றல் மிக்க வேலாயுதத்தையும் மற்றும் பல அரிய போர்க்கருவியும் கொடுத்தார். வீரபாகுத் தேவரும் மற்ற எட்டு சகோதரர்களும் ஷண்முகனின் ஆலோசனைகளின்படி படையெடுப்புக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தனர். எல்லாம் தயாரான வுடன் சிவபெருமான் அவருக்கு ஆசி கூறி அவர் போரில் வெற்றி பெறுவாய் என்று உறுதி கூறினார். இந்தக் காட்சியைப் பார்த்துக்கொண்டிருந்த தேவர் கள் வாழ்த்துக்கள் கூற, சுப்பிரமணியக் கடவுள் தன் ஒன்பது சகோதரர்களுடனும் எண்ணற்ற போர் வீரர்களுடனும் அசுரர்களை வெல்வதற்காகத் தெற்கு நோக்கிப் புறப்பட்டார்.

வழியில் குன்றின் உருவத்திலிருந்த கிரவுஞ்சன் என்ற கொடிய அரக்கனைச் சந்தித்தான். வழிப் போக்கர்களை மயக்கிக் கொன்று தின்றுவந்த கிரவுஞ்சனைத் தன் வேலாயுதத்தை எறிந்து கொன்றான். தாரகாசுரனின் படைத் தலைவர் களுள் ஒருவனான கிரவுஞ்சன் கொல்லப்பட்டதைக் கேள்விப்பட்ட தாரகாசுரன் முருகக் கடவுளை

எதிர்க்க விரைந்து வந்தான். திருமாலைப் போரில் வென்றதன் அடையாளமாக அவருடைய சுதர்சன சக்கரத்தைத் தன் கழுத்தில் அணிந்திருந்தான். அப்பொழுது நடந்த கடுமையான போரில் தாரகா சுரன் தனக்குத் தெரிந்த போர் முறைகளை எல்லாம் பயன்படுத்தியதோடு, சுப்பிரமணியரின் தலைமையில் போரிட்டுக்கொண்டிருந்த தேவர்களின் சேனைக்கு எதிராகப் பலவிதமான ஆயுதங்களைப் பிரயோகித்தான். ஆனால் எந்த ஆயுதமும் முருகனை ஒன்றும் செய்யாமல் விட்டதோடு, அது வரை நடந்தமாதிரி அவனுடைய ஆயுதங்கள் மீண்டும் அவனிடமே திரும்பி வராததைக் கண்டு பெருத்த ஏமாற்றமும் அச்சமும் அடைந்தான். எல்லாவிதமான ஆயுதங்களும் பயனற்றுப் போன பிறகு, சிவபெருமானிடமிருந்து பறித்துக்கொண்ட 'பாசுபதம்' என்னும் அஸ்திரத்தை உரிய முறையில் மந்திரித்து கார்த்திகேயப் பெருமான்மீது ஏவினான். ஆனால் பெருமானோ தன் தகப்பனாரை தியானித்துக் கொண்டும், அவர் பெருமைகளைப் பற்றி எண்ணிக் கொண்டும் அமைதியாக அந்த ஆயுதத்தைக் கையில் வாங்கி வைத்துக்கொண்டார். இந்த எதிர்பாராத முடிவைக் கண்ட அசுரனுக்கு அதிக அச்சமும் திக்கற்ற நிலையும் ஏற்பட்டது. இறுதியில் தம் முடைய வேலாயுதத்தால், சூரபத்மனின் தம்பி யாகிய தாரகாசுரனை வதம் செய்தார். பின்னர் கந்தபெருமான் தென்திசை நோக்கிப் புறப் பட்டார்.

தாரகாசுரனின் குமாரனான அசுகேந்திரன் தன் தந்தையின் மரணத்தைச் சூரபத்மனின் தலைநகரான மகேந்திரபுரிக்கும், சிம்மமுகனின் தலைநகரான அசுரத்துக்கும் அறிவித்தான். அதன் பின் பெருமான் அநேக பிரதேசங்களைக் கடந்து சென்று, முடிவில் தென் பாகத்தில் கடற்

கரையிலுள்ள திருச்செந்தூரை அடைந்தார். அங்கே சென்றதும் தேவர்களுக்கு எதிராக அசுரர்கள் மேலும் மேலும் இழைத்த கொடுமைகளையும், தீங்குகளையும் பற்றி தேவகுருவானவர் பெருமானிடம் சொன்னார்.

## 6. போர் மேகங்கள்

தேவசேனாபதியான கந்தபெருமான் திருச்செந்தூரில் தம் படையுடன் தங்கியிருந்தபோது, சூரபத்மனின் மகேந்திரபுரிக்கு ஒரு தூதனை அனுப்பினார். தேவர்கள் சூரபத்மனுடன் போரிடத் தயாராக இருக்கிறார்களென்றும், இந்திரன் மகனான ஜயந்தனை விடுதலை செய்து, தேவர்களுக்கு இனிமேல் துன்பம் செய்யாமல் இருந்தால்தான் போரைத் தவிர்க்க முடியும் என்று சூரபத்மனிடம் தெரிவிக்கும்படி கந்தபெருமான் தூதனிடம் சொல்லி அனுப்பினார். வீரபாகுதேவரைச் சூரபத்மனிடம் தூது செல்லத் தெரிந்தெடுத்தார். வீரபாகுத்தேவரும், தென்திசையிலுள்ள கடலைத் தாண்டி மகேந்திரபுரிக்குத் தூது செல்லத் தயாரானார்.

கந்தபெருமானின் ஆசியுடன் வீரபாகுத் தேவர் பிரயாணத்தைத் தொடங்கினார். வழியில் எதிர்ப்பட்ட இலங்கையின் மன்னனான வீரசிங்கன் என்னும் அரக்கன் வீரபாகுத்தேவர் மேலே செல்வதைத் தடுக்க முயன்றபோது வீரபாகுத்தேவர் அவனுடன் போரிட்டு அவனை வதம் செய்தார். அம்மாதிரியே வழியில் சந்தித்த அதிவீரன் என்னும் அசுரனையும் கொன்றார். மேலும் மகேந்திரபுரியை நோக்கிப் பயணத்தைத் தொடர்ந்தார். அங்கு சென்றதும், நகரத்தின் வாயில்கள் அனைத்திலும் பற்பல விசித்திரமான வடிவமுடைய அரக்கர்கள்

காவல் புரிந்து கொண்டிருந்ததையும் நகரின் உள்ளே நுழைவது அவ்வளவு எளிதான காரியம் அல்லவென்றும் உணர்ந்தார். எப்படியும் உள்ளே நுழைந்துவிடுவது என்று தீர்மானித்துக்கொண்டு கோட்டையின் ஒரு வாயிலருகே சென்ருர்.

அங்கே கஜமுகன் என்னும் யானைமுகத்தோடு கூடிய ஓர் அசுரனுடன் கடும் சண்டையிட்டு அவனை வென்ருன். நகரத்தின் அனைத்துப் பகுதிகளையும் நன்ருக அறிந்துகொள்ளும் பொருட்டும் அங்கு வாழும் மக்களைப் பற்றித் தெரிந்துகொள்ளவும் வீரபாகுத் தேவர் நகரத்துக்குள் மாறுவேடத்தில் நுழைந்தார். அணிமா சித்தியின் உதவியால் மிகச் சிறிய உருவமுள்ள ஒரு பிராணியின் உருவத்தில் யாரும் அறியாமல் சூரபத்மனின் நகரத்துக்குள் நுழைந்தார்.

நகரத்தைக் காணும்போது தூதுவனின் மனதில் இரக்கமும் பொருமையும் தோன்றியது. ஒப்பற்ற அழகும் சிறப்பும் நிறைந்த நகரில் மிகவும் இழிந்த குணமுள்ள அசுரர்கள் வாழ்வதையும், அதில் வசிப்பவர்களின் தீய நடத்தை காரணமாக விரைவில் அது அழியப்போவதைப்பற்றி எண்ணும் போது இரக்கம் தோன்றியது. அசுரர்கள் தங்கள் தவ வலிமையால் மிகவும் பொலிவும் வசதியும் நிறைந்த அவ்வளவு அழகான நகரத்தை உண்டாக்கி இருக்கின்ருர்களே என்று எண்ணியபோது பொரு மையும் ஏற்பட்டது.

நகரத்தைச் சுற்றி வருகையில், வீரபாகுத் தேவர் இந்திர குமாரனுகிய ஜெயந்தன் அடைக்கப் பட்டிருந்த சிறைச்சாலையின் பக்கம் வந்தார். ஜெயந்தன் தன்னுடைய அவல நிலையை எண்ணி வருந்திக்கொண்டிருந்ததைக் கண்டு, அவனைத்

தேற்றி, கார்த்திகேயக் கடவுள் அவனை விரைவில் சிறையிலிருந்து விடுவிப்பது உறுதி என்று கூறினார். அதன் பிறகு வீரபாகுத் தேவர் தன்னுடைய சிறிய உருவத்தோடு சூரபத்மனுடைய அரசவைக்குள் சென்றார். அது மிகவும் ஆடம்பரத்தோடும், அலங்காரத்தோடும் தேவலோக அரசவை கூட அதற்கு ஈடாகாது என்ற மிகவுன்னத நிலையிலும் இருந்தது. சுப்பிரமணியக் கடவுளின் அருளால் அவருக்கு ஒரு சிம்மாசனம் தோன்றியது. அந்த ஆசனம் சூரபத்மன் அமர்ந்திருந்த ஆசனத்திற்குச் சமமாக இருந்தது. திடீரென்று எதிர்பாராது தூதுவன் வந்ததாலும், அவனுடைய சிறிதும் அச்சமற்ற நடத்தையாலும் வேதனையும் கோபமும் அடைந்த சூரபத்மன், தன் கோபத்தை எல்லாம் மிகவும் சிரமத்துடன் அடக்கிக்கொண்டு, வீரபாகுத் தேவரை யாரென்றும் இங்கு எதற்காக வந்தா ரென்றும் கேட்டான்.

ஒரு சிறிதும் மனம் குன்றாமலும் முருகனிட முள்ள பக்தி மிகுதியாலும், வீரபாகு தான் யாரென்று கூறிக்கொண்டு வந்த காரியத்தைச் சொன்னான். மேலும் சூரபத்மன் ஜெயந்தனை விடுவித்து விட்டுத் தேவர்களுக்கு மேலும் துன்பம் விளைவிப்பதைத் தவிர்க்க விரும்புகிறானா அல்லது கைலாயத்திலிருந்து இறங்கி வந்து நல்லவர்களைக் காத்து, தீயவர்களைத் தண்டிக்கும் நோக்கத்துடன் வந்துள்ள சுப்பிரமணியக் கடவுளோடு போரிட விரும்புகிறானா என்பதை அறியும் நோக்கத்துடனேயே அவனுடைய தலைநகருக்கு வந்துள்ளதாகவும் சொன்னார். அதைக் கேட்டு பெருத்த அவமானமும் கோபமும் அடைந்த சூரபத்மன் வீரபாகு கூறிய எந்த நிபந்தனையையும் ஏற்றுக்கொள்ள மறுத்ததோடு, அந்தமாதிரி பேச்சைக் கேட்பதே தனக்கு பெருத்த அவமானமாகும் என்றான். ஒரு சிறு குழந்தையின்

அர்த்தமற்ற அதிகாரத்தைக் கேட்டு நடப்பது எவ்வளவு பரிகாசத்துக்குரியது என்று கூறி அவனை முதல் சந்திப்பிலேயே போரில் தன்னால் தூள் தூளாகச் சிதறடிக்க முடியும் என்றான். இந்தத் திமிரான மதம் பிடித்த சொற்களைக் கேட்டுக் கோப மடைந்த வீரபாகுத்தேவர் சூரபத்மனும் அவன் சந்ததியினரும் வெகு விரைவில் இறைவனுடைய கைகளால் அழிந்து போவார்கள் என்று சூளுரைத் தார். இதைக்கேட்டு வெகுண்ட சூரபத்மனும் அவனுடைய வீரர்களும் வீரபாகுதேவரைச் சூழ்ந்துக்கொண்டு பிடிக்க வந்தபோது, அவர்களை எளிதில் ஏமாற்றிவிட்டு தப்பித்துக்கொண்டு திருச்செந்தூரை அடைந்து, மகேந்திரபுரியில் நடந்தவைகள் எல்லாவற்றையும் இறைவனிடம் தெரிவித்தார்.

இதற்கிடையில் சூரபத்மன் தன் படைத் தலை வர்களையும், அமைச்சர்களையும் கூட்டி எதிரியைத் தடுத்து நிறுத்தி போரிடுவதற்கான வழிவகைகளை மேற்கொள்ள ஆலோசனைகள் நடத்தினான். ஒரு சிலர் தேவர்களையும், தேவேந்திரன் மகனையும் விடுவித்து, இறைவனிடம் சமாதான உடன்படிக்கை செய்துகொள்ளுபடி ஆலோசனை கூறினார்கள். சிம்மமுகன், வீரபாகுவாகிய தூதுவன் கூறியபடி சிவபெருமான்தான் சுப்பிரமணியனாகிய சிறு பிள்ளை உருவத்தில் வந்திருக்கிறார் என்றும் ''அவர் சொற் படி கேட்டுப் பணிந்து நடப்பதுதான் நமக்கு நல்லது; அவர் சொல்லை மதிக்காவிடில் நமக்கு அழிவு ஏற்படுவது உறுதி'' என்று கூறினான். ஆனால் அழிவை நோக்கிச் சென்றுகொண்டிருந்த அசுர வேந்தனோ அகந்தையும், கர்வமும் நிறைந்த மனத்தனாய் அந்த அறிவுள்ள ஆலோசனையைக் கேட்க மறுத்தான்.

எனவே அரசனின் ஆணையின்படி வரப் போகின்ற போருக்கான ஏற்பாடுகள் பெருத்த அளவில் செய்து முடிக்கப்பட்டன. சிம்மமுகன் தன்னுடைய சகோதரனுடைய உதவிக்குத் தேவை யானபோது போர் தொடங்கியவுடன் தன்னுடைய படையுடன் வருவதாக உறுதிகூறிவிட்டுத் தன் தலை நகருக்குத் திரும்பிச்சென்றான்.

## 7. அசுரர்களின் அழிவு

அசுரர்கள் போருக்குத் தயார் நிலையில் இருக் கிறார்களென்று வீரபாகுமூலம் கேள்விப்பட்ட கார்த்திகேயப் பெருமான் தன் படைவீட்டைத் திருச்செந்தூரிலிருந்து மகேந்திரபுரிக்கருகிலிருந்த ஏமகூடம் என்னும் இடத்துக்கு மாற்றிக்கொண் டார். இதைக் கேள்விப்பட்ட சூரபத்மன், தன் தலைநகருக்கு வெளிப்புறத்திலிருந்த எதிரியின் படை களை விரட்டியடிக்கத் தன் படையை அனுப்பினான்.

அந்தப் படைக்குச் சூரபத்மனுடைய மகன் பானுகோபன் தலைமை வகித்தான். அவன் படை யுடன் வந்து பார்த்தபோது எதிரியின் படை அணி வகுத்து நிற்பதைக் கண்டான். இரண்டு படை களுக்குமிடையே கடும்போர் நிகழ்ந்தது. பானு கோபன் தேவர்களின் சேனையில் பலத்த சேதத்தை விளைவித்தான். பானுகோபனுடைய இரகசிய ஆயுதங்களால் வீரபாகுவும் அவர் சகோதரர்களும் மரண மூர்ச்சை அடைந்தார்கள்.

போர் தேவர்களின் சேனைக்குப் பாதகமாக நடந்துகொண்டிருப்பதைக் கேள்விப்பட்ட கார்த்தி கேயன் அசுரர்களின் சேனை முழுவதையும் மறைப் பதற்காக மோகனாஸ்திரத்தை விட்டார். பானு கோபன் அஸ்திரத்தால் மாண்டவர்களும் மூர்ச்சை

அடைந்தவர்களும் பிழைத்துக் கொண்டார்கள், மேலும் அந்த அஸ்திரம் பானுகோபனை நோக்கிப் பாய்ந்து சென்றது. அதனுடைய பயங்கர விளைவை உணர்ந்த அசுரன் தன் பாட்டியாகிய மாயையின் உதவியுடன், யாருமறியாமல் போர்க்களத்தை விட்டு மறைந்தோடித் தன் தந்தையின் அரண் மனையை அடைந்து, போரின் நிலையைப்பற்றி விளக்கிக் கூறினான்.

பானுகோபனுடைய இயலாத நிலையை உணர்ந்து தானே போருக்குச் சென்று தேவர்களின் சேனையை ஒழிக்கத் திட்டமிட்டு, சூரபத்மன் போரில் ஈடுபட்டு தேவர்களின் சேனையில் பலத்த சேதத்தை விளைவிக்கத் தொடங்கினான். தேவர்களின் சேனையின் தலைவர்களில் ஒருவனான உக்ரன் என்பவன் சிம்மமுகன் என்பவன் மகன் அதிசூரனுடன் கடுமை யாகப் போரிட்டு அவனைக் கொன்றான். இதனால் கடுங் கோபமடைந்த தாரகாசுரனின் மகனான அசுரேந்திரன் என்பவன், போரில் தீவிரமாக ஈடு பட்டு சிறந்த தலைவர்களான கனகன், உன்மத்தன், மந்தன் இன்னும் மற்றவர்களையும் போர்க்களத்தை விட்டு ஓடச் செய்தான்.

வீரபாகுத்தேவர் போரின் அப்பகுதிக்குச் சென்று அசுர அரசிளங்குமாரனான அசுரேந்திரனுடன் தானே நேருக்குநேர் கடும்போர் செய்தான். வெற்றி தோல்வி கணத்துக்குக் கணம் மாறி மாறி வந்தது. இறுதியில் வீரபாகுத்தேவர் தம் சக்தி முழுவதையும் பயன்படுத்தி அசுரேந்திரனைக் கொன்றார். இதன் விளைவாக சூரபத்மனே நேரில் போரில் ஈடுபட்டுத் தன்னுடைய மேலான ஆற்றலையும் வீரத்தையும் பயன்படுத்தி வீரபாகுத்தேவரின் எட்டு சகோதரர் களையும் கொன்றுவிட்டு, வீரபாகுத்தேவருடன் மிகவும் கடுமையாகப் போரிட ஆரம்பித்தான்.

நீண்ட நேரம் கடுமையாகப் போரிட்ட பின் தன் எதிரியின் ஆற்றலை உணர்ந்து தன்னுடைய ஆற்றல் மிக்க 'தண்டத்தை'ப் பிரயோகித்தான். அந்த தண்டத்தினுல் நெஞ்சில் அடிபட்ட வீரபாகுத்தேவர் இரத்தம் கக்கிக்கொண்டு மயங்கிக் கீழே சாய்ந்தார். இதனுல் ஊக்கமும் உற்சாகமடைந்த சூரபத்மன், தளர்ச்சியுற்ற தேவ சேனையிலிருந்த மற்ற வீரர்களை போர்க்களத்தைவிட்டு பயந்து ஓடச் செய்தான்.

சண்முகப்பெருமான் படையின் முன்னணிக்கு வந்து வெற்றிக்களிப்புடனிருந்த சூரபத்மனைச் சந்தித்தார். ஒவ்வொரு ஆயுதமாகப் பிரயோகம் செய்து, சூரபத்மன் மற்றும் அவனுடைய வீரர்கள் ஆகியவர்களின் ஆயுதங்களையும் போர்க் கொடி ஆகியவைகளையும் உடைதெறிந்தார். பிறகு தன் சக்கரப் படையை ஏவி, எண்ணற்ற அரக்கர்களை அழித்தார். சாதாரண ஆயுதங்களால் தன் எதிரியை வெல்ல முடியாதென்பதை உணர்ந்த சூரபத்மன், சிவபெருமானிடமிருந்து பெற்ற பாசுபதாஸ்திரத்தை பிரயோகித்து, அதனுல் கண்டிப்பாகத் தன் எதிரி வீழ்ந்துவிடுவான் என்று எதிர் பார்த்து நம்பிக்கையோடிருந்தான். ஆனுல் அவன் திகைப்பும், வியப்பும் அடையத்தக்க வகையில், பெருமான் அதை அமைதியாகக் கையில் ஏந்தி ஒரு பக்கமாக வைத்துவிட்டார். அந்தமாதிரி கொடிய அஸ்திரத்தை அத்தகைய எளிய முறையில் தாங்கிக் கொள்ள முடிந்த ஆற்றலை ஓரளவுக்கு உணர்ந்த சூரபத்மன், மாயையின் உதவியைக் கொண்டு யாருமறியாமல் போர்க்களத்திலிருந்து வெளியேறித் தன் அரண்மனையை அடைந்தான்.

அடுத்த நாள், மூன்றும் நாள் போர் ஆகையால் பானுகோபன் வலிமை பொருந்திய ஆயுதங்களை அணிந்துக் கொண்டு போர்க்களத்துக்கு வந்தான்.

முதலில் வீரபாகுவும், பானுகோபனும் போரில் சந்தித்தனர். இது ஒரு முடிவான போராட்டமாக இருக்க வேண்டுமென்று எண்ணினர். இந்தக் கடுமையான போரட்டத்திலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ளவும் இமைப்பொழுதில் மின்னலைப் போல் தேவர்கள் மீது மோகனுஸ்திரத்தைத் தொடுத்தான். தேவர்களின் சேனையிலிருந்த வீரர்கள் அனைவரும் நினைவிழந்து மயங்கி கடலுக்குள் வீழ்ந்துவிட்டார்கள். நெருக்கடியான நிலை, ஆனால் சண்முகக் கடவுளுக்கா நெருக்கடியில் கூட என்ன செய்ய வேண்டுமென்று தெரியாது? அவர் தன் வேலாயுதத்தை ஏவி மறைந்த வீரர்கள் அனைவரையும் மீட்டார். யார் இறந்து ஒழிந்து விட்டார்களென்று அசுரர்கள் எண்ணி மகிழ்ந்து கொண்டிருந்தார்களோ, அவர்கள் அனைவரும் உயிரோடு தமக்கெதிரே அணிவகுத்துப் போரிட நிற்பதைக் கண்ட அசுரர்களுக்கு பயமும் நடுக்கமும் ஏற்பட்டது.

வீரமகேந்திரபுரியைப் புயல்போல் தாக்கிக் கொள்ளையிடுமாறு சண்முகப் பெருமான் ஆணையிட்டார். சூரபத்மன் தன் படையைச் சீரமைத்துத் தன் தலைநகரை எதிரிகளின் தாக்குதலிலிருந்து காப்பாற்ற முயன்றான். அவனுடைய இரண்டாவது மகன் இரண்யன் என்பவன், பெரிய சேனையுடன் தன் தந்தைக்குதவ ஓடி வந்தான். இதைத் தடுக்க வீரபாகு தன் சேனையுடன் அங்கு விரைந்தார். போர் மும்முரமாகத் தொடங்கியது. முதலில் தேவர்கள் சேனையில் பலத்த சேதமேற்பட்டது. ஆனால் படிப்படியாகவும், உறுதியாகவும் தன் படையுடன் இரண்யனைப் பின் வாங்கச் செய்த வீரபாகுத் தேவரின் சேனையைத் தடுத்து நிறுத்த அசுரர்களால் முடியவில்லை. குலத்தின் வாழ்நாளும் புகழும் முடியும் நாள் வந்துவிட்டதென்பதை இரண்யன்

உணர்ந்தான். தன்னுடைய குலத்தவர்களுக்கு ஈமக்கடன்கள் செய்வதற்கும் முடியுமானால் மறுபடியும் அசுரர்களின் புகழை நிலை நாட்டவும்,. போர்க்களத்திலிருந்து மறைந்து, மகேந்திரபுரிக்கு வெகு தூரத்திலிருந்த ஓரிடத்தில் மறைவாக வாழ்ந்தான்.

இரண்யன் மறைந்த பிறகு, சூரபத்மனின் மற்றொரு மகனாகிய அக்னிமுகன் என்பவன் போருக்கு வந்தான். நெருப்பு போன்ற முகம் படைத்த இளைஞனான வீரன் முதலில் மிகவும் கடுமையாகப் போரிட்டுத் தேவசேனையில் அதிக சேதம் விளைவித்தாலும், இறுதியில் வீரபாகுதேவரின் ஆற்றலுக்கு முன் அவனால் ஒன்றும் செய்ய முடியவில்லை. வீரபாகுத்தேவருக்கு ஈடுகொடுத்துப் போரிட முடியவில்லை என்று கண்டவுடன் தன் இஷ்ட தேவதையான காளியைப் பிரார்த்தித்து தனக்கு உதவுமாறு வேண்டிக்கொண்டான். அவன் வேண்டுகோளுக்கிணங்கிய காளிதேவியும் கோபத்துடன் தோன்றி தேவர்களின் சேனையில் அதிக சேதம் விளைவித்தாள். ஆனால் வீரபாகுத்தேவரின் அருகில் வந்ததும், புன்சிரிப்புடன் அவர் வெற்றி பெற வாழ்த்தி மறைந்தாள். இதனால் ஏமாற்றமடைந்த அக்கினிமுகன் தன் வலிமை முழுவதையும் திரட்டி மீண்டும் போரிடத் தொடங்கி வீரபாகு தேவரிடம் கடும்போரிட்டு இறுதியில் மாண்டான். அவன் மறைவுக்குப் பின் சூரபத்மனின் மற்ற மக்கள் ஒவ்வொருவராக வீரபாகுத்தேவரிடம் வந்து அவர் வலிமைக்குமுன் நிற்க முடியாமல் மாண்டு போனார்கள்.

பானுகோபன் மூன்றாவது முறையாக போர்க்களத்திற்கு வந்தான். நீண்ட நேரம் கடுமையாகப் போரிட்டபோதும் வலிமையான தேவர்கள்

சேனையை வெல்ல முடியவில்லை. பின் மாயையின் உதவியால், எதிரிகளால் காண முடியாதபடி மறைந்து நின்று பலத்த சேதத்தை உண்டாக்கிக் கொண்டு இருந்தான். இதைக் கண்ட வீரபாகுத் தேவர், ஞானஸ்திரத்தால் மாயையை நீக்கி, அவனை வெளியே வந்து போரிடச் செய்தார். இரண்டு வீரர்களும் கைகலப்பில் ஈடுபட்டார்கள். அவனால் தனக்கு நேர்ந்த சிரமத்தைக் கண்டு வெகுண்ட, வீரபாகுத்தேவர் தன் ஆற்றல் முழுவதையும் பயன் படுத்தி பானுகோபனைத் தடுமாறச் செய்தார். பிறகு தன் வலிமை முழுவதையும் பயன்படுத்தி பானுகோபனுடைய சிரத்தை வெட்டி வெற்றி அடைந்தார்.

இந்த செய்தியைக் கேட்டு, சூரபத்மன் அளவு கடந்த துயரமடைந்தான். போர்க்களத்துக்குச் சென்று, தன் மகனுடைய உடலை வாரி எடுத்துக் கொண்டு தனக்கு ஏற்பட்ட இழப்பை விரைவில் ஈடுகட்டிப் பழி வாங்குவதாகச் சபதம் செய்தான். பின் தன் சகோதரன் சிம்மமுகனை வரவழைத்து, நடந்து முடிந்தவற்றை அவனுக்குத் தெரிவித்தான். அவனால் முடிந்த அனைத்தையும் செய்து வெற்றி பெற வழி செய்யுமாறு கேட்டுக்கொண்டான். அவ்வாறே சிம்மமுகன் போர்க்களத்திற்குச் சென்று தேவர்களின் சேனை நடுவில் புயல்போலப் பாய்ந்தான்.

அவனை எவராலும் வெல்ல முடியாதுபோல் காணப்பட்டது. தேவசேனையின் தலைவர்கள் ஒவ்வொருவராக இறந்துபோனார்கள். வீரபாகுத் தேவர் இந்தப் போக்கைத் தடுத்து நிறுத்தி, தாமே சிம்மமுகனுடைய மக்கள் அனைவரையும் கொன்று ஒழித்தார். இதைக் கண்டு வெகுண்ட சிம்மமுகன் வீரபாகுத்தேவரை எதிர்த்தான். ஓர் அஸ்திரத்

திஞல் வீரபாகுத்தேவரையும் மற்ற வீரர்களேயும் கைகால்களேக் கட்டி, போர்க்களத்திலிருந்து வெகு தூரத்திலிருந்த ஒரு மலேக்கு அனுப்பிவிட்டான். மேலும் மிகவும் முரட்டுத்தனத்துடன் தேவர்களின் பாசறைக்கே சென்று அநேக பூதகணங்களேயும் கொன்ருன்.

இந்தச் செய்தி ஷண்முகப் பெருமானுக்குத் தெரிந்தது. தளராத நெஞ்சும், அளவற்ற ஆற்றலும் கொண்ட சிம்மமுகனுடன் போரிடத் தாமே வந்தார். அநேக அம்புகளேத் தொடுத்து, பூத கணங்கள் மறைத்து வைக்கப்பட்டிருந்த இடத்தி லிருந்து அவைகளே மீட்டார். பின்னர் சிம்ம முகனுடன் போரிடத் தொடங்கிஞர். அவனுடைய அஞ்சா நெஞ்சத்தையும் அளவற்ற ஆற்றலேயும் பாராட்டிஞலும், எதிர்கால நன்மையைக் கருதி அவனேத் தம் ஆற்றல் மிக்க அம்பொன்ருல் கொன்று முடித்தார்.

## 8. சூரபத்மனின் வீழ்ச்சி

மற்றவர்கள் அனேவரும் அழிந்து தனியே விடப் பட்டதாலும் சகோதரர்கள், தன்னேச் சார்ந்தவர் கள் அனேவரின் உதவியையும் இழந்ததாலும், தேவர்கள் வலிமை அளவுகடந்து அதிகரித்து வந்ததைக் கண்டதாலும், வெகுண்ட சூரபத்மன் மற்ற உலகங்களில் தயாராக வைத்திருந்த போர் வீரர்களேச் சேர்த்துக்கொண்டு போர்க்களத்துக்கு வந்தான். சுப்ரமணியப் பெருமான் சூரபத்மனுக்கு மேலும் உதவிப் படைகள் வராமல் தடுத்து நிறுத்திவிட்டு, அவனேத் தனியே சந்தித்தார். அவர்களுக்குள்ளிருந்த பகையின் முடிவு நெருங்கி வந்து கொண்டிருந்தது. இறுதிக் காட்சி தொடங் கியது. சூரபத்மன் வீரபாகுத் தேவர், பூதகணங் கள் மற்றுமுள்ள தேவர்களுடன் போரிட்டு

அவர்களைப் படுகாயப்படுத்தினான். இறுதியில் அசுர சேனாதிபதி, தேவ சேனாதிபதியை நேருக்குநேர் சந்தித்தான். அவர்களுக்கிடையே நடந்தபோர், இந்தப் பிரபஞ்சத்தின் வரலாற்றிலேயே நினைவு கூரக்கூடிய போர்களுள் ஒன்றாகும். நேருக்குநேர் போரிட்டால் வெகு விரைவிலும் உறுதியாகவும் தனக்குத் தோல்வி ஏற்படுவது உறுதி என்றறிந்து கொண்ட சூரபத்மன் தன் தாயாகிய மாயையிட மிருந்து கற்ற மந்திர தந்திரங்கள் அனைவற்றையும் பயன் படுத்தினான். ஒரு மந்திரத்தைப் பயன் படுத்தி, இறந்துபோன அசுரர்களை உயிர்பெற்று எழச் செய்தான். மந்திர சக்தியால் தனக்கு ஒரு தேரை.வரவழைத்துக் கொண்டான். சுக்கிராச்சாரி யாரிடமிருந்து கற்ற வேறொரு மந்திரத்தின் உதவியால் தானே வெவ்வேறு விலங்குகளாகவும், பறவைகளாகவும் மாறி உருவங்களை எடுத்துக் கொண்டு ஷண்முகனுடன் போரிட்டான். அதனை லெல்லாம் ஒன்றும் பயன் ஏற்படவில்லை. ஷண்முகப் பெருமான் மாயைக்கு எல்லாம் அப்பாற்பட்டவன். சூரபத்மனின் தாயாகிய மாயையே வந்திருந் தாலும் ஒன்றும் செய்திருக்க முடியாது. அப்படி இருக்க சூரபத்மனால் என்ன செய்ய முடியும்?

தம்முடைய வில்லில் நாணொலியை எழுப்பி, பாசுபதாஸ்திரத்தை விடுத்தார். அதனால் உயிர் பெற்ற அசுரர்கள் எல்லாம் பிரபஞ்சத்தின் எல்லைக் கப்பால் போய் விழுந்து விட்டார்கள். பெருமானின் மற்றொரு அம்பால் சூரபத்மனின் மாய ரதத்தைத் தாம் பயன்படுத்திக்கொள்ளத் தம் அருகில் இழுத்துக்கொண்டார். அதனால் சூரபத்மன் தன் மாய ரதத்தை இழந்தது மட்டுமல்லாமல், அது அவனுடைய எதிரிக்கே பயன்பட்டது கண்டு அதிர்ச்சி அடைந்தான். வேறொரு அம்பால் அவன் வாகனமும் அழிந்தது. அதன்மேல் சூரபத்மன்

ஒரு பெரிய பறவையின் உருவத்தை எடுத்துக் கொண்டான். ஆனால் இறைவன் தமக்கு இந்திரனை மயில் வாகனமாகக்கொண்டு சூரபத்மனாகிய பறவையோடு போரிட்டு அதை இரண்டாகப் பிளந்தார். சூரபத்மன் பறவையின் உடலிலிருந்து வெளிப்பட்டுத் தன்னைக் காப்பாற்றிக்கொண்டான்.

இந்த மாதிரி தன் கர்வத்தை அழித்துக் கொண்டு தனித்து நிற்கும் வலிமைமிக்க அரக்கனாகிய சூரபத்மன்மேல் இறைவன் கருணை கொண்டான். ஏனென்றால் சூரபத்மன் தன் முற் பிறவிகளில் நற்செயல்களைச் செய்ததோடு, இப்போது இறைவனையே வீரத்துடன் எதிர்த்துப் போரிட்டான். எனவே அவன் முன்னர் தம்முடைய தெய்வீக தேஜஸ் நிறைந்த தோற்றத்தோடு காட்சி அளித்தார். தெய்வீக மயமான விசுவரூபத்தைக் கண்டவுடன், சூரபத்மனின் மனதில் மாயையால் ஏற்பட்ட மயக்கம் தீர்ந்தது. அவனுக்கு இறைவன் அருளால் அளிக்கப்பட்ட தெய்வீகப் பார்வையின் காரணமாக, சூரபத்மன் இறைவனுடைய விராட் ஸ்வரூபத்தைப் பார்த்து வணங்கினான். தான் செய்த தீங்குகளுக்கெல்லாம் தன்னை மன்னிக்குமாறு வேண்டினான்.

இறைவன் மீண்டும் பழைய உருவத்தையே மேற்கொண்டார். இதைக் கண்ட சூரபத்மன் மீண்டும் மாயையில் மூழ்கி மறுபடியும் போரைத் தொடங்கினான். ஒரு பெரிய மரத்தின் உருவத்தில் தோன்றினான். முருகன் தன் வேலாயுதத்தை அந்த மரத்தின்மேல் எறிந்து இரண்டு கூறாகப் பிளந்தார். தன் விதியை வெல்ல முடியாத சூரன் தன் உண்மையான உருவத்தை எடுத்துக்கொண்டு கோபத்துடன் இறைவனை நோக்கிப் பாய்ந்தான். தன் உடல் வலிமையால் இறைவனைக் கீழே தள்ளி

நசுக்கிவிட வேண்டுமென்பது அவன் நோக்கம். போரிட்டுக் களைத்துப்போனதாலும், அசுரனுடைய துன்பங்களுக்கு ஒரு முடிவு காணவேண்டுமென்றும் இறைவன் தன் வேலை எறிந்து அவனை இரண்டு கூறுகளாய் பிளந்தார். இந்தப் பெரும் போரின் நினைவாக, சூரபத்மன் எடுத்த உருவங்களான மயிலும், சேவலும், தமக்கு முறையே வாகனமாகவும் கொடியாகவும் இருக்கவேண்டுமென ஏற்றுக் கொண்டார்.

மகா வலிமை படைத்த சூரபத்மனின் வாழ்வும், தேவர்களின் துயரமும் நிரந்தரமாக முடிந்தன. இந்த மகத்தான நிகழ்ச்சி ஐப்பசி மாதத்தில் தீபாவளிக்குப் பிறகு வரும் வளர்பிறையின் ஆறுவது நாளாகிய ஷஷ்டியில் நடைபெற்றது.

## 9. திருமணங்கள்

### 1. தெய்வயானை

ஷண்முகப்பெருமான் அசுரர்களை வென்ற பிறகு அசுரர்களின் கொடுமையால் சிறையில் வாடிக்கொண்டிருந்த தேவர்கள் அனைவரையும் விடுவித்தார். தேவர்கள் மனம் மகிழ, சுப்பிரமணியப் பெருமான் வெற்றிக் களிப்பிலிருந்த தன் வீரர்களுடன் திருச்செந்தூரை அடைந்து சிறிது காலம் அங்கு தங்கியிருந்தார். விடுதலையும் நிம்மதியுமடைந்த இந்திரனும் தேவர்களும் இறைவனுடைய கருணையையும் நற்பண்புகளையும் வாழ்த்தி வணங்கினார்கள். பிறகு ஒரு பெரிய சிறப்பான வழிபாட்டுக்கு ஏற்பாடு செய்து அவரைத் தக்க முறையில் வணங்கிப் போற்றினார்கள்.

இளமைக்காலத்தில் முருகப்பெருமான் தந்தையோடு கைலயங்கிரியில் தங்கியிருந்தபோது,

திருமாலின் புதல்வியரான அமுதவல்லி, சுந்தர வல்லி என்னும் இருவரை பார்த்திருக்கிறார். பெருமானின் பால லீலைகளைப்பற்றிக் கேள்விப் பட்டிருந்த அவர்களிருவரும் முருகனைப் பார்த்த உடனேயே காதல் கொண்டார்கள். இதை அறிந்த முருகப் பெருமானும் அவர்கள் இருவரும் முறையே இந்திரனுக்கும், தென்னிந்தியக் காட்டிலுள்ள ஒரு வேட்டுவத் தலைவனுக்கும் மக்களாகப் பிறந்து தன்னை மணந்துகொள்வார்கள் என்று வரமளித் தார்.

அதன்படி அமுதவல்லி தேவேந்திரனுக்கு மகளாய்ப் பிறந்திருந்தாள். அவள் மணப் பருவம் அடைந்தாள். முருகப்பெருமான் திருச்செந்தூரில் தங்கியிருந்த நல்வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு, பெருமானுக்கு அவருடைய வாக் குறுதியை நினைவூட்டி, அமுதவல்லியை மணந்து கொள்ளுமாறு இந்திரன் வேண்டினான். அங்கு கூடியிருந்த மற்ற தேவர்களும் அதை ஆமோதித் தனர். ஷண்முகப்பெருமான் தன் சம்மதத்தைத் தெரிவித்துவிட்டு, மதுரைக்கருகிலுள்ள திருப்பரங் குன்றம் என்னும் ஊரில் தங்கி இருந்தார். திருமணத் தைச் சிறப்பாகத் தக்கமுறையில் நடத்துவதற்காக வேண்டிய ஏற்பாடுகள் நடந்துகொண்டிருந்தன. தேவர்கள் அனைவருக்கும் அழைப்பிதழ்கள் அனுப்பப்பட்டன. அவர்களை வரவேற்று உபசரிக்க ஏராளமான ஏற்பாடுகள் நடந்துகொண்டிருந்தன. அழைக்கப்பட்ட அனைவரும் வந்து சேர்ந்தனர். மணவிழா தொடங்க இருந்தது. ஷண்முகப்பெரு மான் தன் தாய்தந்தையர் வரவில்லையே என்று மனவருத்தப்பட்டார். அவர் எண்ணியவுடனே சிவபெருமானும், பார்வதிதேவியும் கணேசப்பெரு மானும் அங்கே தோன்றினர். எல்லோரும் ஒன்று சேர்ந்ததைக் கண்டு அனைவருக்கும் எல்லையற்ற மன

மகிழ்ச்சி ஏற்பட்டது. தெய்வீக ஆடம்பரமும், சிறப்பும் விளங்க கந்தபெருமான், அமுதவல்லி ஆகியவர்கள் திருமணம் நிறைவேறியது. திருமணத்துக்குப்பின் தேவர்கள் அனைவரும் கந்தபெருமான், சிவபெருமான் ஆகியவர்களின் அனுமதி பெற்றுத் தத்தம் இருப்பிடங்களுக்குத் திரும்பிச் சென்று தத்தம் பணிகளை மேற்கொண்டனர்.

## 2. வள்ளி

திருமாலின் ஓர் அவதாரமாகிய உபேந்திரன் ஒருமுறை திருமாலின் வைகுண்டத்தில் மகா விஷ்ணுவையும் திருமகளையும் தரிசிக்கச் சென்றார். அவர்கள் மூவரும் அங்கிருக்கும்போது, அங்கு கண்வ மகரிஷி வந்தார். மூவரில் எவரும் அவரை வரவேற்கவோ, உபசரிக்கவோ எவ்வித அக்கறையும் எடுத்துக் கொள்ளாததைக் கண்டு அவருக்கு ஏமாற்றமும் மனவருத்தமும் ஏற்பட்டது. கோபம் கொண்டு கண்வர் கீழ்க்கண்டவாறு அவர்களைச் சபித்தார்.

திருமால் சிவபெருமானின் பக்தராகப் பல பிறவிகளில் மௌனமான ஞானியராகப் பிறக்க வேண்டும்; திருமகள் காட்டில் அலைந்து திரியும் மானாகப் பிறக்கவேண்டும்; உபேந்திரர் கொடிய விலங்குகளை வேட்டையாடும் வேடனாகப் பிறக்க வேண்டும் என்பதே அச்சாபம். அந்த சாபத்தின் கொடுமை குறைய திருமால் சிவபெருமானைக் குறித்து அநேக ஆண்டுகள் தவம் செய்தார். சிவபெருமான் தம் பக்தர் எதற்குத் தவம் செய்தார் என்று உணர்ந்து, கண்வ ரிஷியை அழைத்து சாபக் காலத்தை ஒரே பிறவியாகக் குறைக்கும்படிக் கேட்டுக் கொண்டார். அவரும் அவ்வாறே செய்தார். கந்தனுக்கும் வள்ளிக்கும் திருமணம்

நடந்தவுடன், மூவரும் சாபம் நீங்கிப் பழையபடியே தங்கள் இருப்பிடங்களுக்குச் செல்லலாம் எனவும் சொன்னார்.

அதன்பின் திருமால் சிவமணி என்ற மௌன ரிஷியாக அவதரித்துக் காட்டில் தவமியற்றிக் கொண்டிருந்தார். உபேந்திரன் அக்காட்டில் ஒரு வேடனாகத் திரிந்து கொண்டிருந்தான். திருமகளும் ஒரு மானின் உருவத்தில் அந்தக் காட்டிலேயே திரிந்துகொண்டிருந்தாள். ஒருநாள் சிவமணி முனிவர் அழகிய அந்த மானைப்பார்த்து எதிர் பாராத கிளர்ச்சியும் காமவுணர்வும் கொண்டார். அந்த மானும் தன் ஆசையை வெளிப்படுத்தியது. அதன் விளைவாக மானுக்கு ஒரு பெண் குழந்தை மானிட வடிவில் பிறந்தது. அதைக் கண்ட மான் அக் குழந்தையை அங்கேயே விட்டு விட்டு வேறு இடத்துக்கு ஓடிவிட்டது. வேடன் உருவத்திலிருந்த உபேந்திரன் அந்தப் பக்கம் எதிர்பாராமல் வந்த போது, குழந்தையை வள்ளிக்கொடிகளின் நடுவில் பார்த்துவிட்டு வீட்டுக்கு எடுத்துச் சென்றான். வள்ளிக்கொடியின் நடுவில் கண்டெடுத்ததால் ''வள்ளி'' என்று பெயரிட்டு தன் குலத்தின் வழக்கத்திற்கேற்ப வளர்த்து வந்தான்.

## 3. திருமணம்

நாரத மகரிஷி கந்தனிடம் வந்து, அவர் கைலாயத்தில் சுந்தரவல்லியைச் சந்தித்ததையும், தற்போது அவள் நம்பிராஜனுக்கு வள்ளியாகப் பிறந்திருப்பதையும், வள்ளி கந்தனையே மணந்து கொள்ள விரும்பித் தவம் செய்து கொண்டிருப் பதையும் தெரிவித்தார். தாமதமில்லாமல் அவள் வேண்டுகோளை நிறைவேற்ற எண்ணி, வள்ளியின் இருப்பிடமாகிய வள்ளிமலைக்குப் போனார். ஒரு

வேடனைப்போல மாறுவேடமணிந்து, தினைப்புனத்தில் பறவைகளை ஓட்டிக்கொண்டு காவல் புரிந்து கொண்டிருந்த கன்னியைக் கண்டு, அவள் முன் சென்று 'இந்தப் பக்கம் ஏதாவது மான் ஒன்று வந்ததா?' என்று கேட்டார். 'இல்லை' என்று மறுத்த வள்ளி, ஒரு கன்னிப் பெண்ணிடம் அறிமுகமில்லாத முறையில் அவன் கேட்டதைக் கண்டித்தாள். அதைக்கேட்ட வேடன் ஏளனமாகச் சிரித்தான். அதனால் கோபமடைந்த வள்ளி தன் தந்தையையும், சகோதரர்களையும் உதவிக்குக் கூவி அழைத்தாள்.

வேடன் சிறிதும் அச்சமின்றி தன்னை மணந்து கொள்ளுமாறு அவளை மீண்டும் கேட்டான். அவன் அதைக் கேட்கவே வந்ததாகவும் சொன்னான். வள்ளியின் கூக்குரலைக் கேட்டு, அவள் தந்தையும் சகோதரர்களும் ஓடிவந்தபோது, வேடனைக் காணவில்லை. அதற்குப்பதில் ஒரு வேங்கை மரம் உயர்ந்து நின்றது. தந்தையும் மற்றவர்களும் வள்ளி விளையாட்டுக்காகவே கூப்பிட்டதாக நினைத்துப் போய்விட்டார்கள். வேங்கைமரம் மீண்டும் வேடனாகவே மாறிவிட்டது. வள்ளி அவனை ஒரு தடியை எடுத்து மிரட்டி ஓட்டிவிட்டாள். சிறிது நேரம் கழித்து ஒரு வயோதிகன் தள்ளாடிக்கொண்டு, களைப்புடன் அவளை நோக்கி வந்துகொண்டிருந்தார். அவள் அவர்மேல் இரக்கம்கொண்டு வயோதிகருக்கு கொஞ்சம் பழங்களும், தண்ணீரும் கொடுத்தாள். அவைகளைப் பெற்றுக்கொண்டு, வயோதிகர் வள்ளியை மணந்துகொள்ள சம்மதம் கேட்டார். ஆனால் வள்ளி கோபம் கொள்ளாமல் தான் முருகப் பெருமானையே மணந்துகொள்ள உறுதி பூண்டு இருப்பதாகச் சொன்னாள். அச்சமயத்தில் அவர்கள் நின்றுகொண்டிருந்த இடத்தை நோக்கி ஒரு யானை ஓடி வருவதைப் பார்த்தாள். அவளுக்கு யானையைக்

கண்டால் அச்சம் அதிகம். அவள் பயத்தால் ஓடிச் சென்று வயோதிகரின் கரங்களில் வீழ்ந்து காப்பாற்றும்படி வேண்டிக்கொண்டாள். வள்ளி அவரை மணந்துகொள்வதாக வாக்களித்த பின்னர் யானை எதிர்பாராத விதமாகத் திரும்பிவிட்டது. பயம் நீங்கிய பின்னர் வள்ளி தான் விளையாட்டாக அவரை மணந்துகொள்வதாகச் சொன்னதாகவும், மணமாகாத கன்னிப்பெண்ணிடம் அவ்வாறு கேட்டது தவறென்றும் ஆபத்துக் காலத்தில் தான் சொன்ன வாக்குறுதிக்குக் கட்டுப்பட வேண்டிய தில்லை என்றும் சொன்னாள். இதைச் சொன்னவுடன் யானை உடனே தோன்றியது. அதைக் கண்ட வள்ளி பயந்து நடுங்கி தான் உண்மையிலேயே விருப்பத் துடன் மணந்துகொள்வதாக உறுதி அளித்தாள். அதே சமயம் அவள் முன் வயோதிகனிருந்த இடத் தில் அவருக்குப் பதிலாக முருகன் கையில் வேலுடன் அவள் முன் நிற்பதைக் கண்டு அவள் பெரும் வியப் படைந்தாள். வள்ளி தன் தவறுக்கு மன்னிக்க வேண்டினாள். அவள் பக்தியைக் கண்டு மெச்சிய இறைவன் அவளைத் தன் மனைவியாக ஏற்றுக் கொண்டார்.

அவள் ஒரு வேடனையும் வயோதிகனையும் சந்தித்த செய்தி பக்கத்திலிருந்த கிராமங்களுக்கெல் லாம் பரவிற்று. அந்த வேடனை ஒரு மோசக்காரனாக எண்ணி, அவள் தந்தை, சகோதரர்கள் முதலியோர் அவனைத் தண்டிக்க அவள் இருக்குமிடத்துக்கு வந்தனர். கந்தன் மறுபடியும் வேடன் உருவம் எடுத்துக்கொண்டு, தன் வேலை வீசி அனைவரையும் சாம்பலாக்கினார். ஆனால் வள்ளியின் வேண்டு கோளுக்கிணங்கி அவர்களை உயிர்ப்பித்தார். அவன் சுப்பிரமணியனே என்று அறிந்த அனைவரும் கீழே விழுந்து வணங்கி மன்னிக்கும்படி வேண்டினர்.

நம்பி ராஜனும் தேவர்களும் மகிழ, நாரத ரிஷியின் முன்னர் வள்ளியின் திருமணம் நடந்தது. வள்ளி, தேவயானை ஆகிய தேவியருடன் இறைவன் கைலாயத்துக்கு அருகிலுள்ள ஸ்கந்தகிரிக்குச் சென்றார்.

''எனவே, நல்லவர்களைக் காக்கவும், தீயவர்களைத் தண்டிக்கவும், பரம்பொருள் ஸ்கந்தன் என்னும் உருவில் அவதாரம் செய்தார். மயிலை வாகனமாகவும் சேவற் கொடியோடும், கையில் வேலுடனும், கந்தன் வள்ளி, தேவயானையாகிய தேவியருடன் விளங்குகிறான்.''

சுப்பிரமணியப் பெருமானுக்குப் போற்றி! வள்ளி தெய்வயானைக்குப் போற்றி! வேலாயுதத்துக்குப் போற்றி! மயில் வாகனத்துக்குப் போற்றி! சேவற் கொடிக்குப் போற்றி! எல்லாம் வல்ல சிவபெருமானுக்குப் போற்றி! சுப்பிரமணியருடைய கதையையும் அவருடைய லீலைகளையும் படிப்பவர் அனைவருக்கும் போற்றி! ஷண்முகப் பெருமானுடைய ஆசிகள் உங்கள் அனைவருக்கும் கிட்டட்டும்!

---

## பாகம் - 3

# கதையின் உட்கருத்து

## I

வேதங்களிலும் உபநிடதங்களிலும் மறை பொருளாக உள்ள உண்மைகளை வலியுறுத்தி அவைகளை மக்களுக்கிடையே பரப்புவதற்காகப் புராணங்களையும் இதிகாசங்களையும் மகரிஷிகள் எழுதி இருக்கின்றனர். வேதங்களில் கூறப்பட்டுள்ள நீதிகளை கதைகளின் மூலமும் வரலாறுகளின் மூலமும் விளக்கிச் சொல்லி இருக்கின்றார்கள். ஸ்கந்த புராணம் இறைவனை தேவர்களின் தலைமைச் சேனாதிபதி என்ற முறையில், ஆறுமுகங்களும், பன்னிரண்டு கைகளும், கையில் ஆயுதமாக வேலும் உடையவராக வர்ணிக்கப்படுகிறார். வள்ளியும் தெய்வயானையும் அவருடைய தேவிமார். அவர் வாகனம் மயில். ''படைத்தலைவர்களில் நான் கந்தன்'', என்று கண்ணன் கீதையில் சொல்கிறார். ''உலகத்தில் தர்மம் குறைந்து, அதர்மம் மலிந்திருக்கும்போது, நல்லவர்களைக் காக்கவும் அல்லவர்களைத் தண்டிக்கவும் நான் உலகத்தில் அவதரிக்கிறேன்'' என்று பகவான் சொல்வது இந்தக் கதைக்குப் பொருத்தமாயிருக்கிறது. அசுரர்களின் மன்னனான சூரபத்மனின் கொடுமைகளை அழிக்கத்தான் இறைவன் கார்த்திகேயன் அல்லது சுப்பிரமணியன் என்னும் அவதாரத்தை எடுத்தார். புராணங்களில் வரும் பாத்திரங்கள் எல்லாம் தெய்வீக நாடகத்தில் மனித உணர்வுகளின் மேம்பாட்டையே சித்தரிக்கின்றன.

ஸ்கந்த புராணத்தின் தலைவன் கந்தபெருமான் என்னும் சுப்பிரமணியக் கடவுளாவார். அவர்

ஆறுமுகங்களுடனும் பன்னிரு கைகளுடனும் உருவகிக்கப்பட்டிருக்கிறார். அவர் உருவம் ஜ்யோதிர்மயமானது. இந்தப் பூவுலகிலுள்ள ஒவ்வொரு மனிதப் பிறவியும் ஐம்பூதங்களாலும் உள்ளே இருக்கும் ஆன்மாவாலும் ஆனது. இறைவன் மனிதப்பிறவி எடுத்தபோது, அதற்கேற்ற முறையில் அவர் உருவம் அமைந்தது. சிவபெருமான் நெற்றியிலிருந்து தோன்றிய தீப்பொறிகள் ஆன்மாவாகவும், உடல் ஐம்பூதங்களாகவும் அமைந்தன. ஆனால் சாதாரண மனிதனிலிருந்து அவரை வேறுபடுத்திக் காட்டுவதற்காக அவரை ஆறுமுகங்களும் பன்னிருகரங்களும் கொண்ட தெய்வீக மனிதனாக காட்டப்பட்டுள்ளது. இந்த ஆறுமுகங்களும் கீழே சொன்னபடி அமைந்துள்ளன:

(i) ஐந்து முகங்கள் நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் பஞ்ச பூதங்களையும், ஆறாவது முகம் பஞ்ச பூதங்களாலான உடலுக்கு உயிரளிக்கும் ஆன்மாவைக் குறிக்கிறது.

(ii) வடமொழியில் பகவான் என்ற சொல்லுக்கு ஆறு தெய்வீக குணங்கள் அமைந்தவர் என்று பொருள். கந்தபெருமானுடைய ஆறு முகங்களும் இறைவனின் ஆறுவிதமான பணிகள் அல்லது வேலைகளைச் செய்கின்றன.

(iii) தமிழ் மறை நூல்களில் இறைவனின் ஆறுமுகங்களும் செய்யும் பணிகள் விவரமாக விளக்கப்பட்டுள்ளன.

ஒரு முகம் அறியாமையை அகற்றி ஞானம் அல்லது அறிவை வழங்குகிறது.

இரண்டாவது முகம் மக்களின் ஆசைகளை நிறைவேற்றி அவர்களின் தேவைகளைக் கவனிக்கிறது.

மூன்றாவது முகம் சடங்குகளையும் வேள்வி களையும் செய்வதற்கு வேண்டிய வலிமையையும், ஊக்கத்தையும் அளிக்கிறது.

நான்காவது முகம் மறைந்துள்ள இரகசியங்களை வெளிக்கொணர்ந்து, ஞானத்தை நாடிச் செல்பவர் களுக்கு அதை அறிய உதவுகிறது.

ஐந்தாவது முகம் அறத்தோரைக் காத்துத் தீய வர்களைத் தண்டிக்கும் வேலையைச் செய்கிறது.

ஆறாவது முகம் உயிர்களுக்கிடையே அன்பைத் தூண்டிவிட்டு மகிழ்ச்சியை உண்டாக்குகிறது.

இந்த ஆறுமுகங்களின் பணிகளுக்கு இசைந்த படியே பன்னிரு கரங்களும் வேலை செய்கின்றன.

வேல், மயில், சேவல் ஆகியவை இறைவன் தம் பணிகளை நிறைவேற்றுவதற்குரிய சின்னங்களாகும். வேல் என்பது இறைவனின் ஞான சக்தியைக் குறிக்கும். அது ஜீவனின் அறியாமையை அழித்து அதனுடைய உரிமையான பேரின்ப நிலைக்கு அழைத்துச் செல்லுகிறது. மயிலும், சேவலும் மாயையாகிய திரையைக் கிழித்து எறிந்து அடிய வர்கள் இறை ஞானத்தைப் பெறும் நெறியில் உதவுகிறது.

மனித மனத்துக்கு வேதத்திலுள்ள அரிய தத்து வங்களைப் புரிந்துகொள்வது எளிய காரியமல்ல. எனவே மற்றெல்லா புராணங்களையும் போலவே கந்தபுராணமும் சாதாரண அறிவுள்ள மக்களுக்கு உதவுவதற்காக எளிய முறையில் கதை வடிவில் அமைக்கப்பட்டுள்ளது.

அவித்யா அல்லது அறியாமையின் காரணமாக ஜீவாத்மா (அது பரமாத்மாவைத் தவிர வேறல்ல) அதனுடைய மேலான நிலையை அறிந்துகொள்வதில்லை. அதனால் அது துன்பங்களுக்கும், துயரங்களுக்கும் ஆளாகி தன்னுடைய மிக மேலான சத்—சித்—ஆனந்த நிலையினின்றும் கீழே இழுக்கப்படுகிறது. இதே காரணத்தால் தங்கள் அறியாமை, அக்கரையின்மை ஆகியவற்றின் காரணமாகத் தேவர்கள் துன்பப்பட நேர்ந்தது. மேலும் சூரபத்மன் தான் புகழ் பெற்ற மேலான தவங்கள் செய்திருந்தபோதிலும், தான் விரும்பிய வண்ணம் இன்பகரமான வாழ்க்கையில் அதிக நாட்கள் நீடித்திருக்க முடியவில்லை.

பரம கருணாநிதியான இறைவன், ஜீவனை அதன் தளையிலிருந்து விடுவிக்க விரும்பி, அதன்மீது அருளைப்பொழிந்து அதனுடைய பழைய இடமாகிய பரமபதத்துக்கே கொண்டு வந்து விடுகிறார். இது இறைவன் அருள் இருந்தால்தான் முடியும். சூரபத்மன் இறைவனருளால் உலகத்திலுள்ள எல்லாச் செல்வங்களையும் இன்பத்தையும் அனுபவித்தாலும், அவித்தையின் சக்தியால், திசை மாறி, இறுதியில் எல்லாவற்றையும் இழக்க நேரிட்டது. சுப்ரமணியரின் உருவத்தில் வந்த சிவபெருமானால்தான் அவன் அறியாமை தீங்கி, ஆத்ம ஞானம் என்னும் உயர்ந்த இலட்சியத்தை அடைந்தான்.

ஜீவன், தற்காலிகமாக இறைவனிடமிருந்து பிரிந்து இருந்துவிட்டு மீண்டும் இறைவனை நோக்கித் திருப்பிச் செல்லும் பாதையில் அநேக துன்பங்களை அடைய நேருகிறது. சுக்ராச்சாரியாராகிய தாழ்ந்த நிலையிலுள்ள மனம் ஜீவனை அதன் இலட்சியத்திலிருந்து கீழே இழுத்து அதன் தளைகளை மேலும்

இறுகச் செய்கிறது. சுக்கிராச்சாரியார் சூரபத்ம னுக்குச் செய்த உபதேசங்கள் எல்லாம் கீழான மன நிலையில் உள்ளவர்களுக்கு. அவர்கள் செய்வதெல் லாம் சரியானவை என்பதைத் தவிர வேறில்லை. அதனுல் ஜீவன் இறையுணர்வு பெறச் செல்லும் பாதையில் பயணம் தடைப்படுகிறது. கடுமையான தவங்கள் பல செய்து சிவபெருமான் அருளால் பல வரங்கள் பெற்றிருந்த போதிலும், சூரபத்மன் நீண்ட ஆயுளுடன் வாழ முடியவில்லை. ஏனென்ருல் அவன் தாழ்ந்த நிலையிலிருந்த மனமாகிய சுக்கிராச் சாரியாரின் அறிவுரைகளைக் கேட்டு அவைகளின்படி நடந்தான்.

எனவே கந்த புராணத்தில், ஜீவர்களின்மேல் மாயையின் விளையாட்டையும், அதனுல் ஜீவர் களுக்கு ஏற்படும் துன்பமும் துயரமும், இறுதியில் ஷண்முகப்பெருமானின் வேலாயுதமாகிய ஞான சக்தியால் விடுதலை பெறுவதும் நன்ருக விளக்கிக் காட்டப்பட்டுள்ளது.

ஷண்முகப்பெருமானின் தேவியர் வள்ளியும், தெய்வயானையும் ஆவர். வள்ளி என்பது இச்சா சக்தியையும், தெய்வயானை என்பது கிரியா சக்தி யையும் குறிக்கிறது. இறைத் தன்மை விரும்பும் ஜீவன் உள்ளத்தை அடக்கி, இலட்சியத்தை அடையும்வரை விடாது முயலவேண்டும்.

எனவே மூன்றுவிதமான சக்திகள் வேல்—ஞான சக்தி; வள்ளி—இச்சா சக்தி, தெய்வயானை—கிரியா சக்தி என்பவை சேர்ந்துதான் சக்திதரன் எனப் படும் ஷண்முகநாதன் ஆகும்.

சக்திகளுக்கு வணக்கங்கள்! தன்னுடைய வேலாயுதத்திஞல் அடியார்களின் அறியாமையைப் போக்கும் இறைவனுக்குப் போற்றி.

# வள்ளித் திருமணம்

இத்தெய்வத்தின் உண்மையான தத்துவம் கீழ்க்கண்டவாறு காணப்படுகிறது. வள்ளி என்பது பரமாத்மாவாகிய பேரின்பமயமான தனக்குரிய வீட்டிலிருந்து பிரிந்து வந்த ஜீவாத்மாவைக் குறிக்கிறது. இவ்வாறு பிரிந்து வந்த ஜீவாத்மா அவித்தையின் காரணமாக இவ்வுலகமாகிய பாலைவனக் காட்டில் அலைகிறது. பாலைவனத்தில் அலைந்து திரியும் இந்த ஜீவாத்மாவை மீட்பதற்காக மகரிஷி நாரதரின் வடிவில் குரு அல்லது ஆசாரியன் தோன்றுகிறார். அவருடைய உதவியால் வள்ளிக்கும் கார்த்திகேயப் பெருமானுக்கும் திருமணம் நடைபெறுகிறது. அதாவது மேலான பர்ப்பிரம்மத்தோடு ஜீவாத்மா புனிதமடைந்த நிலையில் ஒன்றுபடுகிறது.

அந்த ஜீவாத்மா இறைவனிடத்திலேயே ஒரு சிறிதும் மாருமலும், இம்மியளவும் குறையாமலும் பக்தி செலுத்தியதன் காரணமாக, வள்ளி சுப்பிரமணியக் கடவுளைத்தான் மணந்துகொள்வேன் என்ற உறுதியோடிருந்து, பலவிதமான இடையூறுகள் நேர்ந்தபோதிலும் தன்னுடைய இலட்சியத்தை நிறைவேற்றிக்கொள்ள முடிந்தது.

எனவே வைராக்கியம், விவேகம் இரண்டையும் துணைகொண்டு இருந்ததால்தான் ஜீவனுகிய வள்ளி தன்னுடைய பெற்ருேர்கள், மற்ற இடையூறுகள் ஆகியவைகளான மாயையினின்றும் தன்னைக் காப்பாற்றிக்கொண்டு, முடிவில் பரம்பொருளும் பேரின்ப வீடுமாகிய சுப்பிரமணியக் கடவுளுடன் ஒன்ருக இணைய முடிந்தது.

## II

சுப்பிரமணியர் அல்லது சண்முகக் கடவுளின் திருஉருவத்தைப் பற்றிப் பல்வேறு தத்துவங்களும்

கொள்கைகளும் வழங்கிவருகின்றன. சிலர் அவரைத் தேவர்களின் சேனைக்குத் தலைமைத் தளபதி என்று கருதுகிறார்கள். வேறு சிலர் அவர் தேவர்களுக்குத் துணைபுரிய வந்தவர், அவர் மனிதர்களைவிட உயர்ந்தவராக இருந்தாலும், தேவர்களுக்குச் சமமானவர் கூட அல்ல என்று கருதுகிறார்கள்.

சுப்பிரமணியம் என்ற பெயரே நமக்கு அவருடைய உண்மையான தத்துவத்தை விளக்குகிறது. சுப்பிரமணியம் என்றால் பிரம்மத்தை நன்கு உணர்ந்தவர் என்று பொருள்படும். பிரம்மத்தால் தான் பிரம்மத்தை நன்கு அறிய முடியும். எனவே சுப்ரமணியக் கடவுள் பிரம்மத்தைத் தவிர வேறு எவருமில்லை.

சுப்பிரமணியரின் பிறப்பைப் பற்றிய நிகழ்ச்சியும் தத்துவமும் மிகவும் சுவையான ஒன்று. சிவ பெருமானுக்கு ஆறு முகங்கள் இருந்தன. அவற்றுள் நான்கு முகங்கள் நான்கு திசைகளை நோக்கியும், ஒன்று மேல் நோக்கியும் மற்றொன்று கீழ் நோக்கியும் இருந்தன. இந்த ஆறு முகங்களிலுமிருந்த நெற்றிக் கண்ணாகிய மூன்றாவது கண்ணிலிருந்து தேஜஸ் அல்லது தெய்வீகவொளி வெளிப்பட்டது. இந்தப் பேரொளி எங்கெங்கும் நிறைந்தும், விண்வெளி முழுவதும் நிறைந்தும் காணப்பட்டது. சிவ பெருமான் இந்தப் பேரொளி முழுவதையும் தம் கைகளில் வாங்கிக்கொண்டு, அதை வாயுதேவனிடம் கொடுத்தார். சிறிது நேரத்திற்குமேல் அந்த வெப்பத்தைப் பொறுக்க முடியாத வாயுதேவன் அதை அக்கினிதேவனிடம் கொடுத்தான். அக்கினி தேவன் அந்தப் பேரொளியைக் கங்கை நதியில்விட, கங்கை நதியானவள் அதை சரவணப்பொய்கையில் சேர்ப்பித்தாள். அங்கு அது ஆறு குழந்தைகளின் வடிவங்களைப் பெற்று மிதந்துகொண்டிருந்தன.

பார்வதிதேவி அவற்றை ஒன்ருகச் சேர்த்து அணைத்து எடுத்துக்கொண்டபோது, அது ஒருடலும் ஆறு தலைகளும் கொண்ட அவதார புருஷஞக மாறி ஷண்முகன் எனப் பெயர் கொண்டு இப்புவியில் தன் திருவிளையாடல்களைத் தொடங்கியது.

பிரம்மத்தின் கதையும் அதுவே. அது படைப்பின் கதை. பிரம்மம் எங்கும் நிறைந்துள்ளது. பிரம்மம் பேரொளியின் வடிவில் இருந்தது. விண்வெளி முழுவதும் பரந்திருந்தது. பின்னர் அது காற்று, நெருப்பு, நீர், நிலம் ஆகியவற்றிலும் பரவியது. எனவே சுப்பிரமணியக் கடவுளின் பிறப்பின் தத்துவத்திலிருந்து அவர் பரப்பிரம்மத்தைத் தவிர வேறு எவருமில்லை என்பது தெளிவாகப் புரிகிறது.

முருகப் பெருமானுக்கு ஆறு தலைகளிருப்பதால் ஷண்முகன் எனப் பெயர் பெற்ருர். முகத்தில் (அதாவது தலையில்) ஐந்து ஞானேந்திரியங்கள் இருக்கின்றன. இந்த ஐந்து ஞானேந்திரியங்களோடு சேர்ந்து ஆருவது இந்திரியமாகிய புத்தியுடன் ஆறு வாயில்களின் வழியேதான் அந்தராத்மா வெளியிலுள்ள பொருள்களைப்பற்றி அறிகின்றது. இந்த ஆறு ''துவாரங்களின்'' வழியாகத்தான் அந்தராத்மாவின் ஒளி வெளிப்படுகிறது. இந்த ஆறு துவாரங்களின் வழியே உணர்வு வெளிப்படுவதிலிருந்தே, அறிவாளிகள் நமக்குள்ளே இருக்கும் ஆன்மாதான் இந்த உணர்வு என்று அறிந்திருக்கின்ருர்கள். இந்த உள்ளுணர்வுக்கு ஆறு முகங்களிருக்கின்றன. சுப்பிரமணியக் கடவுளுக்கும் ஆறு முகங்கள் இருக்கின்றன. அவர்தான் ஆறு ஞானேந்திரியங்களாகிய ஆறு தலைகளையுடைய மேலான பரப்பிரம்மம்.

சுப்பிரமணியக் கடவுளின் ஆறு முகங்களும் நமக்குள்ளேயுள்ள ஆறு மூலாதார மையங்கள் அல்லது சக்கரங்களைக் குறிக்கின்றன என்று யோகிகள் சொல்லுகின்றார்கள். ஒவ்வொரு தலையும் ஒவ்வொரு சக்கரத்துக்குமுரிய தேவதையின் உருவம். இதிலிருந்தும் சுப்ரமணியக் கடவுள் சாதாரண தெய்வம் மட்டுமல்லாமல், பரப்பிரம்மமே ஆகிறார் என்றும் தெரிகிறது.

எனவே சுப்பிரமணியரைத் தியானம் செய்வது பிரம்மத்தின் உண்மையான நிலையைப்பற்றிய ஞானத்தைப் பெறுவதற்குரிய உறுதியான வழியாகும் என்று பக்தர்கள் கருதுகிறார்கள். சுப்பிரமணியக் கடவுள் ஞானமே உருவானவர். எனவே அவரைத் தியானம் செய்வதால் ஞானம் பெறுவது உறுதி.

இதைத் தவிர ஒரு சாதகனுக்குத் தொடக்கத்தில் சுப்பிரமணியருடைய உருவத்தைப்பற்றி எடுத்துச் சொல்லி, அவருடைய ஆறு முகங்களுடைய உருவம், மயில் வாகனத்திலமர்ந்து, கையில் வேலுடன் இருபுறமும் வள்ளி தேவயானையுடன் உள்ளபடி தியானிக்கச் சொன்னால், அவன் எவ்வித சிரமமும் இன்றி மூன்று மணி நேரம் அதிலேயே இலயித்து, தியானத்திலமர்ந்துவிடுவான். மனத்தை ஒரு முகத்திலிருந்து மற்றொரு முகத்துக்கும், பதினெட்டு கண்களில் ஒன்றிலிருந்து மற்றொன்றுக்கும், பன்னிரு கரங்களில் ஒன்றிலிருந்து மற்றொன்றுக்கும் மாற்றி மாற்றி ஆழ்ந்து பார்த்துக்கொண்டிருப்பதால் மனம் வேறெங்கும் வெளியில் அலைந்து திரிய முடியாது.

ஒரு சாதகன் இப்பயிற்சியில் முன்னேற்றம் அடைந்தவுடன் இந்த மாதிரி செய்வதைவிட்டு

வேலின்மீது மட்டும் தியானத்தில் ஈடுபட்டால் போதும். வேல்தான் சுப்பிரமணியரின் உண்மை யான உருவம். அது ஞானத்தைக் குறிக்கிறது. மற்றெல்லாம் மறைந்த பிறகு, இந்த ஞானத்தின் சின்னம் மட்டும் நிலைத்து நிற்கிறது.

ஆழ்ந்த சிந்தனையும், உயர்ந்த எண்ணங்களும், பரந்த நோக்கும், அறிவுக் கூர்மையும்தான் புத்தியின் சிறப்பான இயல்புகள். இவை அனைத்தும் வேலின் அமைப்பு அல்லது உருவத்தால் குறிக்கப்படுகின்றன. அது உயரமாயிருக்கிறது. அது ஆழமாக கால் வரையில் நீண்ட காம்புடனிருக்கிறது. வேலின் இலை அகன்று இருக்கிறது. எனவே அது ஞானம் அல்லது அறிவின் சின்னமாக இருக்கிறது. எனவே முன்னேற்றமடைந்த சாதகன் வேலையே தியானம் செய்கிறான். இதைத் தியானம் செய்யும் ஒருவன் சச்சிதானந்தமாகிய பரப்பிரம்மத்தை உறுதியாக அடைகிறான்.

சுப்பிரமணியக் கடவுளின் ஆசிகளை நீங்கள் அனைவரும் பெறுவீர்களாக!

## III

இந்து மதத்திலுள்ள கதைகளிலும் வரலாறு களிலுமுள்ளதைப் போன்றே, சுப்பிரமணியக் கடவுளைப்பற்றிய வரலாற்றிலும் பல்வேறு வகை யான உட்கருத்துக்களும், உண்மைகளும், தத்து வங்களும் அடங்கியுள்ளன. சுப்பிரமணியருக்கு ஆறு முகங்கள் உள்ளன. அவர் ஒரு வேலைக் கையிலேந்தி, மயிலின்மீது அமர்ந்து இருக்கிறார். அவர் சேவற் கொடியை ஏந்தியுள்ளார். அவருக்கு தெய்வயானை, வள்ளி என்ற இரு தேவியர் உண்டு. அவர் பரமசிவனின் குமாரர். அவர் தீப்பொறி

அல்லது ஜோதி வடிவில் சிவபெருமானுடைய மூன்ருவது கண்ணினின்றும் தோன்றினுர்.

இதர அசுரர்களின் உதவியுடன் இந்திரனையும் மற்ற தேவர்களையும் அடிமைப்படுத்திச் சிறையிலடைத்த சூரபத்மன் என்னும் கொடிய அசுரனையும் மற்ற அசுரர்களையும் கொன்று அழித்தது அவர் செய்த அரிய செயலாகும். இந்திரனின் மகளான தெய்வயானையை மணந்தார். நாரதரின் ஆலோசனையின்படி, நம்பிராஜன் என்னும் வேடர் குல மன்னனின் வளர்ப்பு மகளான வள்ளியின் பக்தியைக் கடுமையாகச் சோதித்து அவளை மணந்து கொண்டார். சிறு பிள்ளையாக இருந்தபோதே பிரணவ மந்திரத்தின் பொருள் தெரியாத காரணத்துக்காகப் பிரம்மதேவனைச் சிறையிலடைத்தார். பின்னர் சிவபெருமானின் வேண்டுகோளுக்கிணங்கவே அவரை விடுவித்தார். அப்போது சிவபெருமானுக்கு பிரணவப் பொருளை எடுத்துரைத்தார். இந்த நிகழ்ச்சிகள் அனைத்தும் நிரம்பவும் பக்தியுள்ள சுப்பிரமணியக் கடவுளின் அடியவர்கள் மிகவும் புகழ்ந்து நினைவு கூர்ந்து மகிழ்கிருர்கள். சுப்பிரமணியக் கடவுளின் வழிபாடு அநேகமாகத் தென்னிந்தியாவில்தான் அதிகமாக உள்ளது. ஆனுல் இந்தியாவின் மற்ற பகுதி மக்களும் அவரைக் கார்த்திகேயக் கடவுளாக அறியாமலில்லை. இலங்கையிலுள்ள மக்களில் பெரும்பாலோர்கூட முருகனை வழிபடுகிருர்கள். வட இந்தியர்களும், வைணவர்களும் கண்ணனுடைய திருவிளையாடல்களைப்பற்றி எவ்வளவு பெருமை கொள்கிருர்களோ அந்த அளவுக்கு தென்னிந்தியர்கள் முருகனுடைய திருவிளையாடல்களைப் பற்றி எண்ணி மகிழ்கிருர்கள்.

தத்துவரீதியில் பார்த்தால், சுப்பிர்மணியக் கடவுள் மக்களுடைய ஞானத்தைப் பெருக்கி, உண்மையைக் கண்டறிய முடியாமல் அவர்கள் மனதை மறைத்திருந்த பல்வகைப்பட்ட அறியாமைகளைப் போக்கி அவற்றினின்றும் அவர்களுக்கு விடுதலையளிப்பதற்காகவே அவதாரமெடுத்தார். மக்கள் அனைவரும் ஒரே நிலையான வளர்ச்சி பெற்றவர்கள் அல்லர். எனவே அவரவர்கள் நிலைக்கேற்றபடி அவர்களுக்கு ஞானமூட்டித் தன் நோக்கத்தை தனக்கே உரிய சிறந்த முறையில் நிறைவேற்றிக்கொள்கிறார்.

அவருடைய ஆறு தலைகளும் மனித உடலில் நரம்பு மண்டலத்தில் முதுகுத் தண்டு வடத்தின் மேலும் நெற்றியில் இரண்டு புருவங்களுக்குமிடையிலும் அமைந்துள்ள ஆறு பிராண, மூலாதார சக்கரங்களைக் குறிக்கின்றன. இந்த மையங்களில் மனதை ஒருமுகப்படுத்தித்தான் ஒரு யோகி, தன் கீழ்த்தரமான இயல்பை அடக்கியாளவும், சச்சிதானந்தமயமாகிய பிரபஞ்சத்தின் நாயகனோடு ஒன்றுபடவும் முயல்கிறான். எனவே சுப்பிரமணியக் கடவுளின் ஆறு முகங்களும் இந்த ஆறு மூலாதார மையங்களைக் குறிக்கின்றன என்று சொல்லும் போது, ஒரு சாதகன் தன் மனித இயல்புகளையும் அவைக்குரிய கட்டுப்பாடுகளையும் மீறி, பிரம்மத்தோடு ஒன்றுபட முயல்கிறான் என்றும், அவனுக்குள்ளே இருக்கும் தீய இயல்புகளை வென்று முடிவான உண்மையைக் காண அவனுக்குத் தேவையான வலிமையைச் சுப்பிரமணியக் கடவுள் அளிக்கிறார் என்றே பொருள்படும்.

வேல் என்பது அறியாமையாகிய அரக்கனை அழிக்கும் ஆயுதமாகும். இராஜயோகத்தில் மிகவும் வலியுறுத்திக் கூறப்படுவதும், எது இல்லாவிட்டால்

ஒரு யோகிக்குத் தன் முயற்சியில் முன்னேற்றம் ஏற்படாதோ அந்த ''ஏகாக்ர சித்தம்'' அல்லது ஒன்றுபட்ட மனமுமாகும். தாரணை, தியானம், சமாதி என்ற யோக சம்யமங்களுக்குரிய துவக்கநிலை இதுதான். கதையில் அரக்கனாகிய சூரபத்மன் வேலால் கொல்லப்பட்டு மடிவதுதான் அறியாமையின் அழிவைக் குறிக்கிறது.

சுப்பிரமணியன் சிவபெருமானின் மூன்றாவது கண்ணிலிருந்து தோன்றியது அவர் தூய ஞானமே உருவானவர் என்பதைக் குறிக்கிறது. ஏனென்றால் சிவபெருமானின் மூன்றாவது கண் ''ஞானக்கண்'' ஆகும்.

சுப்பிரமணியக் கடவுள் ஏறும் மயில், பறவைகள் எல்லாவற்றிலும் மிகவும் அழகானது. அந்தப் பறவை ஒன்றுதான் தன் உள்ளம் மகிழ்ச்சியால் துள்ளும்போது, தன் பளபளப்பான தோகையை விரித்து நடனமாடித் தன் உள்ளக் கிளர்ச்சியை வெளிப்படுத்துகிறது. அந்த மாதிரி நடனமாடும் போது கீழே விழாமல் சமநிலையிலிருக்கிறது. ஏனென்றால் அது மிகவும் கனமான பறவை. அதனுடைய இரண்டு மெலிந்த கால்களிலேயே பளு முழுவதையும் தாங்கிக் கீழே விழாமல் காத்துக் கொள்ள வேண்டும். சுப்பிரமணியத் தத்துவத்தைத் தெளிவாக விளக்குவதற்காக இந்தக் குறிப்புகள் எல்லாம் நன்கு பயன்படுத்தப் பட்டுள்ளன.

மனதின் சமநிலையை மயில் குறிக்கிறது என்று நாம் பொருள் கொள்ளலாம். அதாவது சத்வ குணம் ராஜஸ நிலையையும், தாமஸ நிலையையும் அடக்கி மேலோங்கி நிற்கிறது எனக் கூறலாம். மனச் சமநிலை அடைந்தவுடன் மனச்சாந்தியும்,

மகிழ்ச்சியுமேற்படுகிறது. அந்த மாதிரியான மனநிலை மனத்திருப்தியை மிகவுயர்ந்த வகையில் வெளிப்படுத்துகிறது. மயில் தன்னுடைய அழகான தோகையை விரித்துக்கொண்டு நடனமாடுவது போல, உண்மையான ஞானம் பெற இந்த மாதிரி தயார்நிலை தான் கண்டிப்பாக ஒருவருக்குத் தேவைப்படுகிறது. சுப்பிரமணியக் கடவுள்தான் அந்த உண்மையான தூய ஞானமே உருவானவர்.

சுப்பிரமணியருடைய சேவற் கொடி ஞானத்தின் உதயம் அல்லது தோற்றத்தைக் குறிக்கிறது. கீழ்வானத்தில் சூரியன் உதிக்கப் போவதைச் சேவல்தானே அறிவிக்கிறது. சூரியன் விண்ணிலிருந்து பிரகாசித்து இருளைப் போக்கு கிறது. அதுபோன்றே சுப்பிரமணியருடைய கொடியிலுள்ள சேவலும் நம் அறியாமை முழுவதையும் அழிக்கக்கூடிய ஞானத்தின் வரவை முன்னரே அறிவிக்கிறது.

சுவாமியின் தேவியராகிய வள்ளியும், தெய்வயானையும், பரம்பொருளோடு ஒன்றுபடுவது மோட்சம் அல்லது விடுதலை அடைய விரும்பும் இரு வகையான பக்தர்களைக் குறிக்கிறது. ஒரு சாரார் வேத நூல்களில் சொல்லப்பட்டுள்ள கட்டளைகளைச் சிறிதும் தவறுமல் அக்கரையோடு பின்பற்றிச் செயல்படுவதால் அவர்கள் வைதிக கர்மாக்களைப் பின்பற்றுபவர்களாகிருர்கள். அவர்கள் சுப்பிரமணியர் புராதன முறையில் சடங்குகளுடன் திருமணம் புரிந்துகொண்ட தெய்வயானையைப் போன்றவர்கள்.

இரண்டாவது வகையைச் சேர்ந்தவர்கள் சட்ட திட்டங்களைவிட மனதில் தோன்றும் உணர்ச்சிகளுக்கும், மனேபாவங்களுக்கும் அதிக மதிப்பளிப்பவர்கள். இவ்வகையான அடியவர்கள் வேட்டுவ

அரசனுன நம்பிராஜனுடைய வளர்ப்பு மகளான வள்ளியைப்போன்றவர்கள். சுப்பிரமணியர் வள்ளிதேவியைக் காந்தர்வம், பைசாசம் என்னும் இரண்டு வகைகளும் கலந்த முறையில் மணந்து கொண்டார். அவளிடம் ஊடலால் காதல் செய்து, தன் சக்தியினுல் தன்னை எதிர்த்த அவளுடைய உறவினர்களோடு சண்டையிட்டு அவர்களைக் கொல்கிருர்.

சுப்பிரமணியர் பற்றிய கதைகளைப் படிக்கும் போது அவர் மலையிலும் அதைச் சார்ந்த இடங்களிலும் தங்களுக்கே உரிய முரட்டுத்தனமான, பண்படாத, முறையில் வழிபடுபவர்களின் கடவுள் என்று தெரிகின்றது. இதிலிருந்து எல்லா வகையான மக்களுக்கும், அவர்களுடைய அறிவு எப்படிப்பட்ட நிலையில் இருந்தபோதிலும், எல்லோருக்கும் ஞானத்தைப் போதிக்க வேண்டும் என்ற நோக்கத்துடனேயே அவதாரம் செய்திருக்கிருர் என்பதையே காட்டுகின்றது. 'மிகவுயர்ந்த ஞானமே சுப்பிரமணியக் கடவுளாக உருவமெடுத்து அவதாரம் செய்து வந்துள்ளது', என்ற உண்மையை நாம் மனதில் உணர்ந்து கொண்டால், அவரைப் பற்றிய கதைகளில் வரும் சம்பவங்களையும், விவரங்களையும் சரியான முறையில் விளங்கிக்கொள்ள முடியும். இது சுப்பிரமணியர் தம் தந்தைக்கே குருவாக உபதேசம் செய்தார் என்ற நிகழ்ச்சியால் தெளிவாக விளங்குகிறது. கதையில் சுப்பிரமணியர் பிரம்ம தேவனிடம் 'ஓம்' என்னும் பிரணவ மந்திரத்துக்குப் பொருள் கேட்டபோது, பிரம்மதேவனுடைய அறியாமையைக்கண்டு அவரைச் சிறையிலிட்டார். இதைக் கேள்விப்பட்ட சிவன் வேடிக்கையாக எண்ணி, சுப்பிரமணியக் கடவுளையே விளக்கம் சொல்லுமாறு கேட்டார். குழந்தையான சுப்பிரமணியரோ, சிவபெருமான் தன்னுடைய சீடனைப்

போலிருந்து கேட்டால்தான் விளக்கம் கூறமுடியும் என்றார். தம் மகனுடைய சீடனாகப் பாவனை மேற்கொள்ள விருப்பம் கொண்ட சிவபெருமான் அவ்வாறே சீடனைப்போல் சிறுபிள்ளையாகிய தம் மகனுடைய வாயால் பிரணவப் பொருளைக்கேட்டு அறிந்தார். இதன் காரணமாகத்தான் சுப்பிர மணியருக்கு ''சுவாமிநாதன்'' என்ற பெயர் ஏற்பட்டது. இதிலிருந்துங்கூட சுப்பிரமணியம் என்பது தூய ஞானத்தைக் குறிக்கின்றது என்பதை யும், மந்திரங்களில் மிகவுயர்ந்த பிரணவ மந்திரத் தின் பொருளும் அதற்குள் அடங்கியுள்ளது என்றும் அறிய முடிகிறது.

## IV

சுப்பிரமணியருடைய உருவம் ஆறுமுகங்களும் பன்னிரு கரங்களும் படைத்தது. கைகளில் வெவ்வேறு வகையான ஆயுதங்கள் தரித்துள்ளார். மார்பின்மீது முக்கியமான ஆயுதமான வேலாயுதம் இருக்கிறது. மயில் வாகனத்திலேறி, சேவற் கொடியை வைத்திருக்கிறார். அவருக்கு இரண்டு பக்கங்களிலும் அவருடைய தேவியரான வள்ளியும் தெய்வயானையும் அமர்ந்து இருக்கின்றனர். மயில் ஒரு கருநிறமுள்ள பாம்பின்மீது நிற்கின்றது. இதுதான் சுப்ரமணியக் கடவுளின் முழு அமைப்பை யும் காட்டும் படம்.

இந்த உருவத்தின் பின்னே அமைந்துள்ள தத்துவத்தைக் காண்போம். ஆறுமுகங்களும் அவருடைய தேஜஸ் அல்லது தோற்றம் நான்கு திசைகளிலும் மேலும் கீழும் பிரகாசிக்கிறது என்பதைக் குறிக்கின்றது. ஆறு முக்கியமான மதங்களிலும் (ஷண்மதம்) சொல்லப்பட்டுள்ளது அவரைப்பற்றித்தான் என்பதுபோல் காண்கிறது. ஞானத்தின் ஆறு அங்கங்களும் தேடித்திரியும்

குறைவற்ற நிறைந்த புருஷன் (புருஷோத்தமன்) அவனே என்றும் குறிப்பிடுகிறது. ஆறு முகங்களும் யோகிகள் கூறுவதைப்போல் மனித உடலிலுள்ள ஆறு சக்கரங்கள் அல்லது மூலாதார சக்திகளைக் குறிக்கின்றன என்றும் சொல்லலாம். அவர்தான் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அளித்தல் ஆகிய தொழில்களையும் மற்றெல்லா தொழில்களையுமே செய்கிறார் என்பது அவர் பன்னிரு கரங்களால் விளங்குகிறது.

வள்ளி, தெய்வயானை, வேல் ஆகியவை முறையே இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி, ஆகிய ஆசை, செயல், அறிவு என்னும் மூன்று சக்திகளையும் குறிக்கின்றன. இவை மூன்றும் பரப் பிரம்மமாகிய சுப்பிரமணியருக்குள் அடங்கியுள்ளன என்று குறிக்கின்றது. இச்சா சக்தியும் கிரியா சக்தியும் அவருக்கு இரு பக்கங்களிலும் வைக்கப்பட்டு, ஞான சக்தி மட்டும் அவர் மார்பின்மேல் வைக்கப் பட்டுள்ளது. ஞானம் என்னும் சக்திதான் மூன்றனுள்ளும் மிகவும் முக்கியமானது, அந்த சக்தி இறைவனை விட்டு எப்போதும் பிரிவதில்லை என்ற உண்மையைக் காட்டுகிறது.

சுப்பிரமணியரின் இன்னொரு உருவம் தண்டபாணி என்று அழைக்கப்படுகின்றது. அந்த உருவத்தில் அவர் வேலுடன் மட்டுமே வள்ளி, தெய்வயானை ஆகிய தேவியர்கள் இல்லாமல் காணப்படுகிறார். இதிலிருந்தும் அவர் இச்சா சக்தி, கிரியா சக்திகளுடன் இல்லாமலிருக்கலாம். ஆனால் ஞான சக்தியுடன் எப்பொழுதுமிருப்பார் என்று அறியலாம்.

சுப்பிரமணியர் வள்ளியைக் காந்தர்வ முறையில் மணந்துகொண்டார். அவளுடைய பெற்றோர்கள்

சம்மதம் பெற்ற பின்னர் அவளை மணக்கவில்லை. இதனால் வள்ளி அவருடைய இச்சா சக்தி என்று தெளிவாகிறது.

ஆனால் அசுரர்களுடன் போரிட்டு வெற்றி பெற்ற பின்னரே, அவர் தெய்வயானையை மணந்து கொண்டார். தன் நன்றியறிதலைத் தெரிவிக்கும் பொருட்டு இந்திரன் தன் மகளாகிய தெய்வ யானையை சுப்பிரமணியருக்கு முறைப்படித் திருமணம் செய்து வைத்தான். இந்த நிகழ்ச்சி தெய்வயானை அவருடைய கிரியா சக்தி என்பதைக் காட்டுகிறது.

சிவசக்தியின் அம்சமாகிய பார்வதி தேவியால் சுப்பிரமணியருக்கு வேல் அளிக்கப்பட்டது. எனவே வேல் என்பது பராசக்தியாகிய பார்வதி தேவியிட மிருந்து நேரடியாக வந்த தூய ஞானம் என்பதைக் குறிக்கும். வேலின் அமைப்பானது, ஞானம் என்பது, ஜோதி வடிவில் வேலின் அடியால் குறிக்கப் படுகின்ற மூலாதார சக்கரத்திலிருந்து தோன்றி, வேலின் தண்டால் குறிக்கப்படும் நாடி மண்டலத் தின் வழியே வந்து பிரம்மரந்திரமாகிய ஆயிரம் இதழ் படைத்த தாமரை மலரை (இலைவடிவி லுள்ள வேலின் நுனி) துளைத்துக்கொண்டு மேலெழுந்து இந்தச் சக்கரங்கள் அல்லது நாடி களுக்கு மேலே சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது என் பதைக் காட்டுகிறது. ஷண்முகனின் மயில் வாகனம் பிரணவ மந்திரத்தின் உருவத்திலிருக்கிறது. அது பிந்துவின் வடிவம். மயில் தன் தோகையை விரிக்கும்போது பிரணவத்தின் வடிவத்தில் வட்ட மாக இருக்கிறது. அதன் நடுவில் முருகன் உருவத் தில் பரப்பிரம்ம ஜோதி இருக்கிறது. அடக்கி ஒடுக்கப்பட்ட பாம்பு மயிலின் காலின்கீழ் மிதிபட்டு

அடங்கி இருக்கிறது. அது மாயை அல்லது தூய்மையற்ற தன்மை பிரணவத்தின் சக்திக்கு முற்றிலும் கட்டுப்பட்டு அடங்கி இருக்கின்றது என்பதைக் காட்டுகிறது.

கொடியிலுள்ள சேவலின் உருவம், ஒலிவடிவம் (நாத ரூபம்) அல்லது பிரணவத்தின் நாத ரூபத்தைக் காட்டுகிறது. சூரியன் அடிவானத்தில் தோன்றும்போது கூவுவது சேவலின் இயற்கை.

சுப்பிரமணியரால் கொல்லப்பட்ட சூரபத்மனின் கதையைப்பற்றிப் பார்க்கலாம். தாரகன், சிம்மமுகன், சூரபத்மன் ஆகிய அசுரர்கள் மாயையின் புதல்வர்கள். அவர்கள் தேவர்களைத் துன்புறுத்தி, தேவகுமாரனைச் சிறையில் அடைத்தார்கள். முருகன் அவர்களுடைய பிரார்த்தனைக்கிணங்கி, மூன்று அசுரர்களையும் தன் வேலால் கொன்று தேவகுமாரனைச் சிறையினின்றும் விடுவித்தான். பின்னர் வெற்றி பெற்ற தேவர்களின் வேண்டுகோளின்படி, இந்திரன் மகளாகிய தெய்வயானையைத் திருமணம் புரிந்தான். இந்த நிகழ்ச்சிகளின் தத்துவங்கள் பின்வருமாறு. மாயையின் புதல்வர்கள் மூவரும் சத்வ, இராஜஸ, தாமஸ குணங்களாவார்கள். இவைகளின் மூலகாரணம் தூய்மையற்ற நிலையாகிய மாயை என்று காட்டப்பட்டுள்ளது. ஜீவன் எப்பொழுதும் இவைகளின் வசப்பட்டு, அவைகளுக்கு அடங்கி இருக்கிறது. சுப்பிரமணியக் கடவுள் ஜீவனின் பிரார்த்தனைகளைக் கேட்டு மனமிரங்கி, இந்த மூன்று குணங்களாகிய விரோதிகளின் பிடியிலிருந்து ஜீவனை விடுதலை செய்கிறது. ஜீவனை விடுதலை செய்வது மட்டுமல்லாமல், ஜீவனைப் பரமாத்மாவாகிய தன்னோடு இணைத்துக் கொள்கிறது.

# வள்ளித் திருமணம்

இருளடைந்த மலைக்காடுகளில் கொடிய வேடர்கள் மற்றும் அவள் உறவினர்களுக்கிடையே வளர்ந்து வரும் வள்ளி, தினைப்புனத்தில் கதிர்களைக் கொத்தவரும் பறவைகளைக் கவண் எறிந்து விரட்டிக் கொண்டிருக்கிறாள். ஆனால் அவள் மனம் எப்போதும் முருகபிரானின்மேல் காதல் கொண்டிருக்கின்றது. தக்க சமயத்தில் முருகன் பல மாறு வேடங்களில் அவள்முன் தோன்றி, அவளைச் சோதனை செய்து, விநாயகரின் உதவியால் யானையை வரவழைத்து அவளைப் பயமுறுத்தி, முடிவில் தன் உண்மையான உருவத்தில், அவள்முன் வெளிப்பட்டு திருமணம் செய்து கொள்ளுவதற்காக அவளை அழைத்துச் செல்லுகிறான். அந்தச் சமயத்தில் வள்ளியின் வளர்ப்புத் தாய்தந்தையரோடு போரிட்டு அவர்களைக் கொல்கிறான். வள்ளியின் வேண்டுகோளுக்கிணங்க மீண்டும் அவர்களை உயிர்ப்பித்து அவளுடன் திருமணம் முடித்துக் கொள்ளுகிறான்.

இந்தக் கதையிலடங்கியுள்ள தத்துவத்தைப் பார்க்கலாம். இருண்ட காடு தாமஸ குணத்தையும், கொடிய வேடர்கள் இராஜஸ குணத்தையும் குறிக்கின்றன. இவைகளின் பிடியில் சிக்குண்ட ஜீவன்தான் வள்ளி. தினைப்புனத்தில் அவள் காவல் புரிவது, பரமாத்மாவை அறிவதற்காக அவள் செய்யும் அக்கறையுள்ள சாதனையைக் குறிக்கின்றது. தினைக்கதிர்களைக் கொத்தவரும் பறவைகள் அவளுடைய கடுமையான சாதனைக்கு, ஏற்படும் இடையூறுகள். தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காக, கையில் விவேகமாகிய கவணை ஏந்தி, வைராக்கியமென்னும் கற்களால் எறிந்து, இடையூறுகளைப் போக்கிக்கொள்கிறாள். அவள்

சாதனையைச் சோதனை செய்வதற்காக, முருகன் மாறு வேடங்களில் அவள் முன் தோன்றி, முடிவில் யானையின்மூலம் பிரணவப் பொருளை அவளுக்கு உணர்த்துகின்றான். வள்ளியைச் சுற்றிலுமுள்ள வேடர்களாகிய இராஜஸ சக்திகளை வென்று, சுத்த சத்துவமாக மாற்றுகின்றான். அதற்குப் பிறகு ஜீவன் விடுதலை பெற்று, பரப்பிரம்மத்தோடு ஒன்றாக இணையும் உன்னத நிலையை அடைகிறது.

## பாகம் - 4

## முருகனின் அடியவர்களான ஞானிகள்

### 1. நாரதர்

நாரதர் மூவுலகங்களிலும் சுற்றித்திரிந்து கொண்டிருந்தபோது, அத்ரி, பிருகு, குத்சர், வசிஷ்டர், கௌதமர், கச்யபர், ஆங்கீரசர் ஆகிய சப்தரிஷிகளைச் சந்தித்தார். அவர்களுடைய உயர்ந்த நிலையையும் பெருமையும் கண்டு பொறாமை கொண்டார். அவரும் முனிவர்களுள் சிறந்த ஒருவராக மாறவேண்டுமென்று விரும்பினார். கணேசரிடம் சென்று தாம் சப்தரிஷிகளைவிட உயர்ந்தவராக இருக்க என்ன செய்ய வேண்டுமென்று கேட்டார். கணேசர் கிருத்திகை விரதத்தை எவ்வாறு அனுஷ்டிக்க வேண்டுமென்று ஆலோசனை கூறி, கந்தபெருமானை வழிபடும் முறையை நாரதருக்கு உபதேசித்தார். பன்னிரெண்டு ஆண்டு காலம் இந்த விரதத்தை அனுசரித்த பிறகு சுப்பிரமணியரின் அருளால் அவருடைய நோக்கம் நிறைவேறியது.

### 2. முசுகுந்த மன்னன்

முசுகுந்தன் என்ற மன்னன் தென்னிந்தியாவிலுள்ள கரூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு

வந்தான். சுப்பிரமணியக் கடவுளைக் குறித்துத் தவம் செய்ய விரும்பி, வசிஷ்டமுனிவரை அணுகி அதற்கான விரதங்களைச் சரிவர அனுஷ்டிக்கும் முறைகளை உபதேசிக்குமாறு வேண்டிக்கொண்டான். முனிவரும் சுப்பிரமணியருக்கு உகந்த (i) வெள்ளிக்கிழமை (ii) கிருத்திகை (iii) கந்த சஷ்டி ஆகிய விரதங்களை அனுஷ்டிப்பதன் சிறப்பைப் பற்றி விளக்கிக் கூறினார். விரதங்களின் சிறப்பையும், அவற்றை அனுஷ்டிக்கும் முறைகளையும் விளக்கமாகத் தெரிந்துகொண்ட மன்னனும் நம்பிக்கையுடனும் பக்தியுடனும் அவற்றைத் தொடங்கினான். சிலகாலத்திற்குப் பிறகு சுப்பிரமணியக் கடவுளிடம் அந்த மன்னன் மிக்க பக்தி செலுத்தித் தவத்தில் ஈடுபட்டிருந்தபோது, இறைவன் அவன்முன் தோன்றி அவனுக்குத் தேவையான வரங்களை அளித்தார். மேலும் இறைவன் தம் படையிலிருந்த வீரபாகு முதலிய வீரர்களை அந்த மன்னனுக்குப் பணிபுரியச் சொன்னார். இறைவனின் கட்டளைக்கிணங்க, வீரபாகுத் தேவர் முதலியவர்கள் மனிதப் பிறவி எடுத்து, முசுகுந்த மன்னனின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து, ஊழியம் செய்தார்கள். மன்னன் இறைவனருளால் வாழ்வில் வளத்தோடும், செல்வத்தோடும், அமைதியோடும் மகிழ்ச்சியோடும் வாழ்ந்தான்.

முசுகுந்த மன்னன் மிகவும் வலிமைபடைத்தவனாக இருந்ததால், தேவேந்திரனும் அசுரர்களுடன் போரிட அவன் உதவியை நாடி வந்தான். மன்னனும் மனமிசைந்து இந்திரனுக்கு உதவிசெய்து அசுர மன்னன் வலனைத் தோற்கடித்தான். அவன் போர் முடிந்து தேவலோகத்திலிருந்து திரும்பியபோது திருமால் அவனுக்குச் சோமாஸ்கந்தமூர்த்தி விக்கிரகம் ஒன்றைப் பரிசாகக் கொடுத்தார். தலைநகர் திரும்பியதும் முசுகுந்த மன்னன் சோமாஸ்

கந்தமூர்த்தியைத் தென்னிந்தியாவிலுள்ள திருவாரூர் என்னும் தலத்தில் பிரதிஷ்டை செய்வித்தான். சிறிது காலத்திற்குப்பின் அவனுக்கு அக்னிவர்மன் என்ற புதல்வன் பிறந்தான். பின்னர் முசுகுந்த மன்னன் தன் அரசாங்கத்தைத் தன் புதல்வனிடம் ஒப்படைத்துவிட்டு, எஞ்சியுள்ள வாழ்நாளை கைலையங்கிரியில் தவத்தில் கழிப்பதற்காக மனஅமைதியுடன் சென்றான்.

## 3. சிவகவி

தென்னிந்தியாவில் ஒரு காலத்தில் பொய்யாமொழிப் புலவர் என்பவர் மிகவும் சிவபக்தி உடையவராக இருந்தார். சிவபெருமானிடமிருந்த அளவுகடந்த பக்தியின் காரணமாக, வேறெந்த தெய்வத்தையும்—சுப்பிரமணியர் உள்பட—வணங்கவோ, புகழ்ந்து பாடவோ மறுத்து வந்தார். இறைவன் அவருக்கு ஞானத்தை அளித்து சிவபெருமானுக்கும் ஷண்முகப்பெருமானுக்கும் உள்ள ஒற்றுமையைக் காட்டினார். அதன்பின் அவர் ஷண்முகப்பெருமானிடம் அதிக அக்கறையும் பக்தியும் காட்டத் தொடங்கினார். அந்தப் புலவர் சிவகவி என்ற பெயரும் பெற்றார்.

## 4. நக்கீரர்

ஏறக்குறைய 2000 ஆண்டுகளுக்கு முன்னர் பழந்தமிழ் நாட்டில் நக்கீரர் என்ற பெரும்புலவரும் ஞானியுமான பெரியவர் ஒருவர் இருந்தார். அவருடைய புலமையையும், கல்வியையும் கண்டு தேவர்களும் அஞ்சினர். அவருக்கு முருகக் கடவுளிடம் அளவு கடந்த பக்தி இருந்தது.

நக்கீரர் என்ற அந்த அந்தணர் தென்னிந்தியாவிலுள்ள பாண்டிய நாட்டு மன்னனின் அரசவைப்

புலவராக இருந்தார். அகந்தையும், கர்வமும் கொண்ட அவர் ஒரு சமயம் ஓர் ஏழை அந்தணப் புலவர் அரசனிடமிருந்து பரிசு பெறுவதைத் தடுத்து விட்டார். அதற்கு மேலும் அந்த ஏழை அந்தண னுக்காகச் சிவபெருமானால் எழுதி அனுப்பப்பட்ட கவிதையிலேயே குற்றம் இருப்பதாகக் குறை கூறினார். அதன் விளைவாக இறைவன் நக்கீரருக்குத் தொழு நோய் உண்டாகுமாறு சாபம் கொடுத்தார். இறைவன் பெருமையை உணர்ந்து கொண்ட நக்கீரர், அவரிடம் மன்னிப்பு வேண்டினார். அவர் மீது இரக்கம் கொண்ட இறைவன் கயிலையங்கிரிக்கு யாத்திரை செல்லுமாறும் அங்கு அவர் நோய் தீரு மென்றும் கூறினார். எனவே நக்கீரர் கயிலையங் கிரியை நோக்கி யாத்திரையாகப் புறப்பட்டார். வழியில் காளஹஸ்தி என்னுமிடத்தில் ஓர் ஏரிக்கரை யிலிருந்த ஆலமரத்தின் கீழே அமர்ந்து தியானத்தில் ஈடுபட்டார். அப்போது ஒரு விந்தையான சம்பவம் நிகழ்ந்தது. மரத்திலிருந்து ஓர் இலை கீழே விழுந்தது. ஆனால் பாதி இலை நிலத்திலும், மீதி நீரிலும் இருந்தது. நீரில் விழுந்த பாதி மீனாகவும், நிலத்தில் விழுந்த பாதி பறவையாகவும் மாறியது. மீன் பறவையைத் தண்ணீருக்குள் இழுக்க முயன்றது. பறவை மீனை இழுத்துக்கொண்டு பறக்க முயன்றது. எனவே ஒரு காய்ந்த இலையிலிருந்து தோன்றிய இரண்டு பிராணிகளும் போராடிக் கொண்டிருந்தன. இந்த விந்தையான நிகழ்ச்சியால் நக்கீரருடைய தியானம் கலைந்தது.

அங்கே ஒரு பிரம்மராக்கதன் வாழ்ந்து வந் தான். இந்த மாதிரி தியானம் கலைந்த 1000 சிவனடியார்களை ஒவ்வொருவராகச் சேர்த்து வைத்து ஆயிரமாவது அடியார் சேர்ந்து முடிந்த வுடன் அவர்கள் அனைவரையும் விழுங்கிவிடுவதாக விரதம் பூண்டிருந்தான். ஏற்கனவே 999 அடியவர்

க‌ளைப் பிடித்து ஒரு குகையில் வைத்திருந்தான். அந்த பிரம்மராக்கதன் இப்போது குளக்கரையில் தோன்றி நக்கீரரையும் எடுத்துச் சென்று அதே குகையில் அடைத்துவிட்டு, அவர்கள் 1000 பேரையும் விழுங்குவதற்குமுன் குளித்துவிட்டு வருவதற்காகக் குளத்திற்குச் சென்ருன். ஏனென்ருல் இராக்கதர்களுக்குக்கூட சில நல்ல பழக்கங்கள் இருந்தன.

நக்கீரருக்குமுன் குகையிலிருந்த சிவனடியார்கள், அவர் மாதிரியே தியானம் கலைந்த சிறு தவறுக்காகப் பல ஆண்டுகள் சிறைப்பட்டிருந்தார்கள். பிரம்மராக்கதன் அவர்களுக்கு நல்ல சத்துள்ள உணவையளித்து கொழுக்கவைத்துக் கொண்டிருந்தான். நக்கீரர் வந்ததால் 1000 பேர் சேர்ந்துவிட்டதால், அரக்கன் இன்னும் சிறிது நேரத்தில் தங்கள் எல்லோரையும் கொன்று விழுங்குவது உறுதி என்பதற்காக எல்லோரும் அழுது புலம்பி நக்கீரரைச் சபிக்கத் தொடங்கினர். அதோடு இறைவனையும் அவனுக்கு அடியவனுன நக்கீரரையும் குறை கூறினர். நக்கீரருக்கு நிலைமை முழுவதும் புரிந்தது. அரக்கன் இன்னமும் குகைக்குத் திரும்பவில்லை. ''அவருடைய கயிலாய யாத்திரை மரணத்துக்குப்பின் போகும் யாத்திரையாக மாறி மதுரையிலுள்ள சோமசுந்தரக் கடவுளின் வரம் இப்படியா வீணுக வேண்டும்? சிறந்த அடியவர்களாகிய 999 பேருடைய வாழ்வும், ஏதோ ஓர் அரக்கனின் சூழ்ச்சியால் செய்த தவறுக்காக இப்படியா பயனற்றுப் போக வேண்டும்? இது ஒரு பெரிய சோதனையேயாகும். இறைவன் கண்டிப்பாக அனைவரையும் காப்பாற்றுவார்'' என்று இவ்வாறு அவர் எண்ணிக்கொண்டிருக்கும் பொழுது, அவர்கள் அனைவரும் மடியும் நேரம் சமீபித்துக்கொண்டிருந்தது.

இருப்பினும் நக்கீரர் அனைவரையும் தேற்றி தம்முடைய இஷ்ட தெய்வமாகிய ஷண்முகனின்மீது உணர்ச்சி வசப்பட்டு பாடத் தொடங்கினார். தமிழ் இலக்கியத்திலேயே சிறந்த ஒன்றான ''திருமுருகாற்றுப்படை'' என்னும் இந்தக் கவிதை இன்றும் அடியவர்களால் ஆர்வமுடன் பாடப் பெறுகிறது. ஆறு முகம் படைத்த இறைவனின் போற்றத்தக்க குணாதிசயங்களைப் பற்றிய விளக்கங்கள் மிகவும் ஆர்வத்துடனும் பக்தியுடனும் பாடப் பட்டபோது மண்ணும் விண்ணும் இறைவனும் மனமுருகின.

உடனே ஒரு விந்தையான நிகழ்ச்சி ஏற்பட்டது. அரக்கன் குகைக்குள்ளே அடி எடுத்து வைத்தவுடன் முருகக் கடவுள் இருள்நிறைந்த குகை அதிரத் தோன்றினார். தம்முடைய வலிமைமிகுந்த ஆயுதங்களுடன் பிரம்மராக்கதன்மீது பாய்ந்து அவனோடு போராடி, அவனைத் துண்டு துண்டாகக் கிழித்து எறிந்தார். ஆயிரம் அடியவர்களையும் குகையிலிருந்து விடுவித்தபோது மற்ற 999 பேரும் நக்கீரரைப் புகழ்ந்து வணங்கினர். ஆயிரம் அடியவர்களும் ஆறுமுகப்பெருமானின் அளவற்ற பெருமையைப் போற்றிப் பாடினர்.

ஆறுமுகப்பெருமானுடைய திருவிளையாடல்களைப் புகழ்ந்து நக்கீரரால் பாடப் பெற்றுள்ள 'திருமுருகாற்றுப்படை' என்னும் நூல் எல்லோருடைய உள்ளங்களிலும் குடிகொண்டுள்ள இறைவனைப் பக்தியுடன் போற்றி வணங்குமாறு வழிப்படுத்தும் (ஆற்றுப் படுத்தும்) முறையில் அழகிய சொல்வளத்தோடு எடுத்துரைக்கப் பட்டுள்ளது.

## 5. கச்சியப்ப சிவாச்சாரியார்

கச்சியப்ப சிவாச்சாரியார் முருகக் கடவுளின் அடியார்களுள் மிகப்பேறு பெற்றவர். ஏறக்குறைய ஆயிரமாண்டுகளுக்கு முன்னர் காஞ்சிபுரத்தில் வாழ்ந்து வந்தார். பத்து வயது நிரம்புவதற் குள்ளேயே அனைத்து நூல்களையும் கற்று சிவாகம நூல்களில் புலமை நிறைந்து விளங்கினார்.

ஷண்முகக் கடவுள் அவர் கனவில் ஒருநாள் தோன்றி ''குழந்தாய்! நீ தமிழில் கந்தபுராண மென்று பெயரிட்டு ஒரு நூல் இயற்ற வேண்டும். அதற்கு வடமொழி நூலான சங்கர சம்ஹிதையை மூல நூலாக கொள்வாயாக. உன்னுடைய நூலின் காப்புச் செய்யுளின் முதலடி ''திகடசக்கரச் செம்முக மைந்துளான்'' என்று அமையட்டும் என்று திருவாய் மலர்ந்தருளினார். கச்சியப்பர் இறை வனுடைய கட்டளையை எண்ணி வியந்து, மீண்டும் மீண்டும் எண்ணிப்பார்த்து அந்தத் திருப்பணியை மேற்கொண்டு சிறப்புடன் செய்து முடித்தார். அதை அரங்கேற்றம் செய்வதற்காக புலவர்கள் குழுவின் முன் எடுத்துச் சென்றபோது சிலர் இறைவனே எடுத்துக்கொடுத்ததாகச் சொல்லப் பட்ட முதலடியைப் பற்றி விளக்கம் கேட்டனர். அப்போது இறைவனே புலவர் குழுவில் ஒருவர் மனதில் தோன்றி அந்த முதலடிக்கான இலக்கணத்தை ''வீரசோழியம்'' என்ற பழம் பெரும் தமிழ் நூலில் காணலாம் என்று சொன்னார். இந்த தெய்வீகக் கருணையை எண்ணி எல்லோரும் இந்நூல் மிகச்சிறந்தது என ஒரே மனதுடன் உறுதி யாகக் கூறினர்.

## 6. பகழிக் கூத்தர்

வைணவராகப் பிறந்த ஒருவர் சுப்பிரமணியக் கடவுளின் அடியவரான கதை இது. சில நூற்றாண்டு

களுக்கு முன்னர் அவர் சதுர்வேத மங்கலம் என்னும் ஊரில் வாழ்ந்தார். அவர் வயிற்று வலியால் மிகவும் துன்பப்பட்டுக் கொண்டிருந்தார். என்ன செய்தும், எந்தக் கடவுளை வேண்டியும் வலி நிற்கவில்லை. முடிவில் திருச்செந்தூரிலுள்ள முருகப்பெருமானை வேண்டிக்கொண்டதும் வயிற்றுவலி வியக்கத்தக்க முறையில் நீங்கிவிட்டது.

அவருக்கு வயிற்றுவலியினின்றும் விடுதலை கொடுத்ததற்காக இறைவனுக்கு நன்றிக் கடனைச் செலுத்தி வழிபடும் பொருட்டு திருச்செந்தூருக்குப் போனார். சிறிது காலம் அங்கே தங்கியிருந்த பொழுது தம் நன்றியை இறைவன்மீது பாடல்கள் வடிவில் தெரிவித்துக்கொண்டார் பக்தி இலக்கியத்திலேயே ஒப்புயர்வற்ற ''பிள்ளைத் தமிழ்'' என்ற வகையைச் சார்ந்ததாக அமைந்துள்ளது. அதை அரங்கேற்றம் செய்யக் கோயில் புலவர்கள் கூடி, அதைக்கேட்டு மகிழ்ந்து அது மிகச் சிறந்தது என ஒப்புக்கொண்டனர். இப்பொழுதும் திருச்செந்தூர் கோயிலில் ஒவ்வொரு நாளும் வழிபாட்டின்போது அது பாடப்படுகிறது. பகழிக்கூத்தருடைய நூலை எல்லோரும் ஒருமனதாகப் பாராட்டினலும், அவருக்குரிய கோயில் மரியாதைகளை அவர் வைணவர் என்பதால் அளிக்கவில்லை. ஆனல் பகழிக்கூத்தருக்கு இறைவன்தான் முக்கியமே தவிர இந்த அற்பமான மரியாதைகளைப் பற்றிக் கவலை இல்லை. எனவே மனதில் ஒரு விதமான கலக்கமுமின்றி வீட்டுக்குச் சென்ருர். ஆனல் வைணவராகப் பிறந்தவர் என்ற ஒரே காரணத்துக்காகப் பகழிக் கூத்தருக்கு கோயில் மரியாதைகள் அளிக்காத புலவர்கள் கூட்டத்தை சேர்ந்தவரல்ல இறைவர். அவர்களுக்கு அன்றிரவே நல்ல பாடம் ஒன்றைக் கற்பிக்க இறைவன் விரும்பினர். தன் மார்பில் கோவிலில் சாற்றப்பட்ட விலையுயர்ந்த நகை ஒன்றை

எடுத்துச் சென்று வைணவ பக்தரின் மார்பில் அணிவித்துவிட்டார். அந்த நெஞ்சத்திலிருந்து தானே இறைவனைப்பற்றிய உருக்கமான பாடல்கள் பொங்கி எழுந்தன. அதை இன்றும் அனுபவிக்கிருர்களல்லவா? மறுநாள் காலையில் கோவில் அலுவலர்கள் நகையைக் காணுமல் திருடனைத் தேடிக் கண்டுபிடிக்க முயன்றனர். பகழிக்கூத்தருடைய மார்பு இறைவன் திருவருளால் நகையுடன் பிரகாசிப்பதைக்கண்டு சொல்லொண்ணு வியப்படைந்தனர். முந்தைய நாள் நிகழ்ச்சிகளை விசாரித்தறிந்த அவர்கள் ஞானியாகிய பகழிக்கூத்தருக்குரிய மரியாதைகளைச் செய்யாமல் இறைவனுக்கே தீங்கு செய்ததை உணர்ந்தார்கள். அவரிடம் மன்னிப்பு வேண்டி, நன்கு அலங்கரிக்கப்பட்ட பல்லக்கு ஒன்றில் அமரச் செய்து, அந்த ஊர் முழுவதும் அவரைச் சுமந்து வந்து, முருகப்பெருமானுடைய புகழையும், பகழிக்கூத்தரின் பக்தியின் பெருமையும் போற்றிப் பாடினர்.

## 7. முருகம்மையார்

தென்னிந்தியாவில் சுப்பிரமணியக் கடவுளின் பக்தையான முருகம்மையார் என்ெருரு பெண்மணி இருந்தார். அவர் தம் சாதியைச் சேர்ந்த பணக்கார இளைஞர் ஒருவருக்கு வாழ்க்கைப் பட்டிருந்தார். இளமைப் பருவத்திலிருந்தே அவருக்கு முருகனிடம் அளவற்ற பக்தியிருந்தது. அதன் காரணமாகவே அவர் முருகம்மையார் என்ற பெயர் பெற்ருர். அவர் வீட்டுக்கு வந்த பரதேசிகள், பிச்சைக்காரர்கள், துறவிகள் ஆகிய அனைவருக்கும், ஒருவர்கூடத் தவருமல், வாரி வழங்கினுர்.

உடலின்பத்தையே பெரிதாகக் கருதிய அவர் கணவருக்கு இவருடைய நடத்தை பிடிக்கவில்லை.

இறையுணர்வு காரணமாக முருகம்மையார் செய்த காரியங்களைத் தடுப்பதற்காக அவர் கணவர் அடித்தும், திட்டியும் அவரால் அதை நிறுத்த முடியவில்லை. அதற்கு மாறாக அவருக்கு முருகக் கடவுளிடமிருந்த பக்தியும், நம்பிக்கையும் மேலும் மேலும் வளர்ந்து வந்தது. சாதுக்களிடம் எளிய முறையில் பழகி அவர்களுக்கு வேண்டிய உதவிகள் எல்லாம் செய்ததன் காரணமாக, கணவர் முருகம் மையாருடைய ஒழுக்கத்தைப்பற்றியே சந்தேகப் படத் தொடங்கினர்.

ஒரு நாள் தன் சொல் கேளாத மனைவியின் செயலாலும், தன் சகோதரர்களின் தூண்டு தலாலும், கடும்கோபம் கொண்ட கணவர், ஒரு கத்தியால் முருகம்மையாருடைய இரண்டு கைகளையும் வெட்டிவிட்டார். இறைவனுடைய பக்திக்காகத் தம் கணவனையே மறந்த முருகம்மை யாரை இறைவன் கைவிடவில்லை. இறைவன் அவர்கள்முன் தோன்றி, முருகம்மையின் கைகளை முன்போல் வளரச் செய்து, உலகுக்கும், அவள் கணவருக்கும், அவளுக்கு தம்மிடமிருந்த ஆழ்ந்த பக்தியைப்பற்றி விளக்கிக் கூறினர். முருகம்மை யாருக்கு தம் அருளாசிகளை வழங்கி கணவனும், மனைவியும் மகிழ்ச்சியுடனும் செல்வச் செழிப்புடனும் அமைதியுடனும் வாழுமாறு வாழ்த்தினர்.

## 8. அருணகிரிநாதர்

ஏறக்குறைய 500 ஆண்டுகளுக்கு முன்னர் திருவண்ணமலையில் தேவதாசியர் குலத்தைச் சேர்ந்த ஒரு புகழ்பெற்ற அடியவர் இருந்தார். இந்த அடியவர் தொடர்பாக ஒரு விசித்திரமான விஷயமிருக்கின்றது. இவர் விஷயத்தில் ஷண்முகக்

கடவுளிடத்தில் இறையுணர்வே இல்லாத மனத்தில் இறை உணர்வூட்டி ஆட்கொண்டார் என்று சொல்வதைவிட இறையுணர்வுக்கு விரோதமான இயல்புள்ள மனத்தில் இறையுணர்வூட்டி ஆட்கொண்டார் என்பது மிகப்பொருத்தமாக இருக்கும். ஒன்றுமறியாத அப்பாவிகள் இறைவன் அருணகிரியார் போன்றவர்களிடம் அருள் காட்டுவது, அவர்கள் எவ்விதமாக நடந்துகொண்டு அநியாயங்களைச் செய்வதற்கும் அனுமதிபெற்று இறையருளுக்குப் பாத்திரமாகலாம் என்பதையே குறிக்கிறது என்பார்கள். ஆனால் மனிதன் எவ்வளவு மோசமாக இருந்தாலும் அணுவளவாவது அவன் உள்ளத்தில் இறையுணர்வு இருக்குமானால், அதை அடிப்படையாகக்கொண்டு பெரும் அளவு இறையன்பு திடீரென்று வளர்ச்சிபெற்று, ஞானிகளும் கூட பல்லாண்டுகள் தவமியற்றியும் பெறமுடியாத அளவுக்குப் பொறுமைப்படவேண்டிய உயர்ந்த நிலையில் இருக்கும் என்பதையே உணர வேண்டும்.

அருணகிரியாரின் இளமைப் பருவம் மிகவும் மோசமாக இருந்தது. மிகவும் மோசமான பெண்பித்து கொண்டவராகவும் தீய செயல்கள் நிறைந்தவராகவும் காணப்பட்டார். அவருடைய உடல் பால் நோயால் மிகவும் மோசமான நிலையில் பாதிக்கப்பட்டது. அவர் இளமைப் பருவத்திலேயே இறந்துவிட்ட அவர் தாயாரின் கட்டளைப்படி அவருடைய சகோதரி அவருடைய விருப்பத்திற்கு மாறாக எதுவும் சொல்லாததுமல்லாமல், அவ்வப்பொழுது அருணகிரியாருக்குத் தேவையான பொருள் கொடுத்தும் வந்தார். தன்னிடமிருந்த பொருள் முழுவதையும் செலவழித்துவிட்டபடியால், தன் குலவழக்கத்திற்கேற்பத் தம் உடலை விற்றும் கிடைத்த பொருளை அவருக்களிக்கத் தவற

வில்லை. அவருக்கு வயதாகிவிட்டதால் அவரை யாவரும் விரும்பாதபோது, என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்தார்.

ஆனால் அருணகிரியார் தம் உடல் நோயைப் பற்றியோ தம் சகோதரியின் இயலாத நிலையைப் பற்றியோ கவலைப்படவில்லை. தம் சகோதரியை மிகவும் துன்புறுத்தி வந்தார். ஒருநாள் அவர் தம் சகோதரியை மிகவும் வற்புறுத்திப் பொருளுக்காகத் தொந்திரவு செய்து பொருள் தராவிட்டால் வீட்டு வாயிலிலேயே விழுந்து இறந்துவிடுவதாகச் சொன்னார். அதைக்கேட்ட அவர் சகோதரி மிகவும் மனம் வருந்தி, அவரைத் திருத்த முடியாமற் போகவே, கீழ்க்கண்டவாறு சொல்லத் தொடங்கினார். ''தம்பி! உனக்கு என்நிலையை புரிந்து நீ திருப்தி அடையவில்லை. உடலின்பத்தில் மிகவும் நாட்டமுள்ள உனக்கு இன்னமும் அதை விட மனமில்லை. நம் குலம் நியாயமான முறையில் இன்பம் அனுபவிக்கமுடியாத ஆண்களுக்கு உதவுவதற்காக ஏற்பட்டது. நாம் இருவரும் ஒரே தாய்க்குப் பிறந்திருந்தாலும் நம் தந்தையர் வெவ்வேறானவர். இப்பொழுது என்னால் உனக்கு முன்போல் பொருள் கொடுத்துதவ முடியவில்லை. எனவே என்னிடமே உனக்கு வேண்டிய இன்பத்தை அனுபவித்துக்கொள். இதைத் தவிர எனக்கு வேறு வழி தெரியவில்லை'' என்று புலம்பினார். இந்த வருத்தம் தோய்ந்த பேச்சு அருணகிரியாரின் செவிகளில் காய்ச்சிய ஈயத்தை ஊற்றியமாதிரி இருந்தது. உடனே மனம் நடுங்கித் தன் வாழ்வில் தான் செய்த தீமைகளை எல்லாம் எண்ணி வருந்தினார். வருத்தமிகுதியால், கலவரத்துடன் திடீரென்று வெளியில் ஓடிச்சென்று, திருவண்ணாமலைக் கோயிலின் கோபுரத்தின்மீது ஏறி, தான் செய்த பாவங்கள் அனைத்துக்குமாக தன் உயிரைத்

தியாகம் செய்யத் தீர்மானித்துக்கொண்டு கீழே தரையை நோக்கிக் குதித்தார்.

கீழே பாய்ந்த அருணகிரியாரின் உடல் தலை கீழாகத் தரையை நோக்கி வந்துகொண்டிருந்தது. அவர் மற்றெல்லாத் தெய்வங்களையும்விட உயர்வாகக் கருதியவரும், மற்றெல்லாரையும்விட இவரை அதிகம் விரும்பியவருமாகிய சுப்பிரமணியக் கடவுள் ஒரு வாலிப யோகியின் வடிவத்தில் இவர் தரையில் விழாமல் தம் கைகளில் ஏந்திக்கொண்டார். ''அருணகிரி! உனக்குத் தகாத இந்தச் செயலை ஏன் செய்தாய்? உன்னுடைய கடந்த கால நற்கருமம் உன்னைக் காப்பாற்றி இருக்கிறது. இந்தக் கௌமார சடாட்சர மந்திர உபதேசத்தைப் பெற்றுக்கொள். உலக முழுவதும் சுற்றி வந்து இறைவனைப்பற்றிப் பாடி என் புகழை தேசமெங்கும் பரப்பு,'' என இறைவன் கட்டளை இட்டார். அந்த உருவம் தன்னைக் கையிலேந்தித் தனக்கு உபதேசம் செய்தவரையில் அவரை ஒரு இளம் துறவியாகவே அருணகிரியார் எண்ணினார்.

மேலே கூறப்பட்ட இறைவனருளுக்குப் பாத்திர மான அந்த ஆன்மா, விரைவில் இறைவன் ஆணை யிட்ட நற்பணியைத் தொடங்கியது. அருணகிரியார் பற்பல இடங்களுக்குச் சென்று பல பாடல்களைப் பாடினார். இதர ஞானிகள் பக்தியுடன் அநேக தெய்வங்களைப் பற்றிப் பாடியுள்ள போதிலும், அருணகிரியாருக்கு முருகனைத் தவிர வேறு தெய்வ மில்லை. எனவே அவருடைய புலமையையும், திறமையையும், பக்தியையும் பயன்படுத்தி முருகன் திருப்புகழையே பாடினார்.

அவர் பாடிய பாடல்கள் ''திருப்புகழ்'' என்று பெயர் பெற்றன. அவர் பாடிய 16,000 திருப்புகழ்

பாடல்களில் 1,300 பாடல்களே இதுவரை கிடைத்துள்ளன. மற்றும் தென்னிந்திய நாடு முழுவதிலும் மிகவும் பக்தியுடனும் ஆர்வத்துடனும் பாடப்பட்டு வரும் ''கந்தர் அநுபூதி'', ''கந்தர் அலங்காரம்'', மற்றும் பல பாடல்களையும் பாடியுள்ளார்.

## 9. குமரகுருபர சுவாமிகள்

திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள ஸ்ரீ வைகுண்டம் என்னுமிடத்தில் ஏறக்குறைய 350 ஆண்டுகளுக்கு முன்னர் குமரகுருபரர் வாழ்ந்தார். குழந்தையாயிருக்கும்போது அவர் ஊமையாக இருந்தார். தம் குழந்தைக்குப் பேசும் ஆற்றல் கிடைக்க வேண்டும் என்ற பெருத்த ஆவலில் அவருடைய பெற்றோர் அதே மாவட்டத்திலுள்ள திருச்செந்தூர் என்னும் பதிக்குச் சென்று பல மாதங்கள் தங்கியிருந்து அங்கு எழுந்தருளியுள்ள சுப்ரமணியக் கடவுளிடம் மன்றாடி வேண்டிக் கொண்டார்கள். விரைவில் தன் மகன் தெய்வீக அருளால் குணமடைவான் என்று நம்பினார்கள். மாதங்கள் கழிந்தன. பயன் ஏதும் கிட்டவில்லை. செய்த பிரார்த்தனைகளும் வேண்டுகோள்களும் வீணாயின. மனமுடைந்துபோய் வருத்தம் தோய்ந்த பெற்றோர் அங்கிருந்த கோயில் குளத்தில் இரவு நேரத்தில் விழுந்து தங்கள் உயிரை மாய்த்துக் கொள்ளுவதென்று தீர்மானித்துக்கொண்டனர். ஆனால் இறைவனிடம் எதை மறைக்க முடியும்? இறைவன் அந்த இரவே உறங்கிக்கொண்டிருந்த ஊமைச் சிறுவனை எழுப்பி, அவன் நாவில் தன்னுடைய ''சடாட்சர'' மந்திரத்தை எழுதி, அவனுக்குத் தரிசனத்தை அளித்து, ''குழந்தாய்! விடியற்காலையில் கோயிலில் நடைபெறும் விசுவரூப தரிசனத்துக்கு வா!'' என்று சொன்னார். விடியும் நேரத்தில் குழந்தையிடம் சென்ற பெற்றோர்கள்

அவன் இரவு நடந்த நிகழ்ச்சிகள் அனைத்தையும் விளக்கமாகக் கூறுவதையும், அவனிடத்தில் நன்கு கற்றறிந்த பண்டிதர்கள்கூடப் பொறாமைப்படக் கூடிய அளவு சொல்லாற்றல் ஏற்பட்டு இருப்பதை யும் கண்டு வியப்பும் திகைப்பும் கொண்டனர். அந்தச் சிறுவன் விரைவில் ஒரு புகழ்பெற்ற ஞானி யாகவும் பக்தனுகவும் மாறி இறைவனைப் பற்றி, குறிப்பாக முருகனைப் பற்றிப் புகழ்ந்து பல பாடல் களை இயற்றியுள்ளார்.

குமரகுருபர சுவாமிகள் கந்தனைப் பற்றிப் புகழ்ந்து 'கந்தர் கலிவெண்பா' என்ற நூல் ஒன்று இயற்றியுள்ளார். மதுரையில் மீனுட்சி அம்மையைப் பற்றிப் பல பாடல்கள் இயற்றினுர். மீனுட்சி அம்மையே நேரில் தோன்றி அவர் கழுத்தில் முத்து மாலை ஒன்றை அணிவித்தார். பின்னர் அவர் தருமபுரம் ஆதீனத்தின் தலைவராக்கப்பட்டார். தமிழ் நாட்டிலுள்ள பல திருத்தலங்களுக்கும் சென்று அங்குள்ள திருக்கோயில்களில் எழுந்தருளி யுள்ள தெய்வங்களைப் பற்றிப் பாடல்கள் பாடி, பின்னர் வாரணுசி என்னும் காசி நகரை அடைந் தார். அங்கிருந்த பாதுஷாவைப் பார்க்கச் சென்ற போது ஒரு சிங்கத்தின் மேலேறிச் சென்றுர். சுவாமி களின் பெருமையை உணர்ந்த பாதுஷா, வாரணுசி யில் கங்கைக் கரையில் கேதாரேசுவரர் கோயிலை யும், கேதார் காட்டையும் அமைப்பதற்கு குமர குருபர சுவாமிகளுக்கு உதவி செய்தார்.

## 10. அழகுமுத்துப் புலவர்

இந்த மிகப் பேறுபெற்ற பக்தர் ஏறக்குறைய 200 ஆண்டுகளுக்கு முன்னர் நாகையிலுள்ள சுப்பிர மணியச் சுவாமி கோயிலில் கணக்கராகப் பணி புரிந்து வந்தார். அவர் இரவில் கோயிலில் வழங்

கப்படும் பிரசாதத்தைத் தவிர வேறு உணவு எதையும் உண்ணமாட்டார். ஒரு நாள் வேலே மிகவும் அதிகமிருந்ததால் கடும் உழைப்பின் காரணமாகக் களேத்துப்போய் அன்றிரவு கோயிலில் வாகனங்கள் வைத்திருக்குமிடத்தில் படுத்துக் கொண்டு நன்ருக அயர்ந்து தூங்கிவிட்டார். கோயிலில் அர்த்தஜாம பூஜையும் மற்ற கைங்கரியங்களும் முடிந்த பிறகு, அர்ச்சகர்களும், மற்றவர்களும் அழகுமுத்துவைத் தேடினர்கள். அவர் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்ததால் வரவில்லே. அவர் அங்கில்லே என்று தீர்மானித்துக்கொண்டு கோயிலின் வாயிற் கதவுகளேப் பூட்டிக்கொண்டு போய்விட்டார்கள்.

நள்ளிரவில் எவ்வித ஒலியும், ஓசையுமின்றி அமைதியாக இருந்தது. அழகுமுத்து எழுந்து பார்த்தபோது அங்கு எவருமில்லே என்று கண்டார். பசியோ வயிற்றைக் கிள்ளுகிறது. என்ன செய்வார்? பாவம். தம் திக்கற்ற நிலேயைக் குறித்து சுப்பிரமணியக் கடவுளே வேண்டினர். இறைவன் அவர் முன் மிகவும் பக்தியுள்ள ஒரு பூசாரியின் வடிவில் தோன்றி, அவர் தோளே அன்புடன் தட்டி என்ன விஷயமென்று அன்புடன் கேட்டார். அழகுமுத்து அவரிடம் பசிக்கு உணவு கேட்டார். ஏனென்ருல் அவர் அளவு கடந்த பசியால் வாடிக் கொண்டிருந்தார். இறைவன் தேவாமிர்தம் போன்ற உணவை வரவழைத்து, அந்தப் பெரும் பேறுபெற்ற பக்தருக்குப் பசியையும் களேப்பையும் போக்கி நீரும் கொடுத்தார். அழகுமுத்துக்கு அதைப்பற்றி எதுவும் தெரியாது. அதை உண்ட அழகுமுத்துவின் வயிற்றுப்பசி மாத்திரம் நீங்கவில்லே. அவருடைய பூர்வ கர்மங்களும் தீயின்முன் தூசிபோல் எரிந்துபோயின. அவர் தெய்வீக ஒளியுடன் பிரகாசித்துக் கொண்டு நின்ருர்.

அப்போது பூசாரி வடிவில் இருந்த இறைவன் ''நம்முடைய இறைவனைப் புகழ்ந்து சில பாடல்களைப் பாடு'' என்றார். ஆனால் அழகுமுத்துவோ, "ஐயா, என்ன சொல்கிறீர்கள்? எழுத்து வாசனையே இல்லாத நான் எதை, எப்படிப் பாட முடியும்?'' என்று சொன்னார். அப்பொழுது ஒரு விந்தையான சம்பவம் நடந்தது. அதுவரையில் சாதாரண பூசாரியாக இருந்தவர், ஆறுமுகங்களும், பன்னிரு கரங்களும், தெய்வீக ஒளியுடனும், தமக்கே உரிய தெய்வீகத் தோற்றத்தோடு இறைவன் அழகு முத்துவின் முன் தோன்றி, ''நான் தான் வேலாயுதன், நான்தான் நீ வணங்கும் ஷண்முகத் தெய்வம். பாடு. நீ கட்டாயம் பாட வேண்டும்'' என்றார். அழகுமுத்து தாம் காண்பது கனவல்ல, நனவுதான் என்று உணர்ந்தார். அவர் உடல் முழுதும், இறை உணர்வால் சிலிர்த்தது. மனதில் தெய்வீக ஞானமும் கல்வியறிவும் மலர்ந்தது. உடனே உணர்ச்சி வசமாகி இறைவனைப் புகழ்ந்து வியக்கத்தக்க முறையில் பாடத் தொடங்கினார். மறு நாள் காலையில் பூசாரிகளும், அலுவலர்களும் எண்ணற்ற அடியவர்களும் கோயில் கதவுகளைத் திறந்துகொண்டு வந்தபோது, அழகுமுத்து கடல் மடை திறந்தாற்போல உணர்ச்சி வசப்பட்டு, தெய்வீகப் பாடல்களை உள்ளமுருகப் பாடிக் கொண்டு இருப்பதைக்கண்டு வியப்பும், திகைப்பும் அடைந்தனர்.

அப்போதிருந்து அழகுமுத்து பெரிய ஞானியாக மாறிவிட்டார் என்று எல்லோரும் அறிந்து கொண்டார்கள். அவர் இறுதி நாட்களும் விந்தை நிறைந்ததாகவே இருந்தது. நீண்ட தூரத்திலுள்ள எல்லாத் தலங்களுக்கும் யாத்திரை சென்று. இறுதியில் சீர்காழிக்கு அருகில் தங்கி, தியானம் செய்துகொண்டிருக்கும் சமயம் அவர் தம் பூத

உடலை நீத்தார். எல்லோரும் அவரைப் பார்த்து வியந்துகொண்டிருக்கும் அதே சமயத்தில், அவருடைய சொந்த ஊரில் ஒரு விந்தையான நிகழ்ச்சி நடந்தது. அவர் முன்பு பணியாற்றிக் கொண்டிருந்த சுப்பிரமணிய சுவாமியின் திருக் கோயிலுக்குள்ளே அழகுமுத்து மிகவும் வேகமாக ஓடுவதை பூசாரிகளும், அலுவலர்களும், மற்றவர் களும் வியப்புடன் பார்த்தார்கள். இதனால் திகைத்து நின்ற அவர்கள், அவரைக் கூப்பிடாமல், அவர் உள்ளிருந்து திரும்பி வருவதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். ஆனால் அழகுமுத்துவோ திரும்பி வரவே இல்லை. அவர் திரும்பி வருவதற் காக உள்ளே போகவில்லை. அவர் விரும்பிய இறைவனோடு ஒன்றாய்க் கலக்க விரும்பியே உள்ளே ஓடிச் சென்றார். எனவே அழகுமுத்துவின் புனித ஆவி கோயிலுக்குள்ளே ஓடிச் சென்றதைத்தான் எல்லோரும் பார்த்தார்கள். அங்கே பூத உடலை நீத்து, இங்கே இறைவனோடு ஒன்று கலந்தார்.

ஷண்முகக் கடவுளின் அடியவர்களின் ஆசிகளை அனைவரும்பெற்று வாழ்வீர்களாக!

---

## பாகம் – 5.

## கந்தப்பெருமானின் மிக முக்கியமான திருப்பதிகள் தல மகிமை

நமக்குள்ளே ஒளிருபவரும், ஒளிகளுக்கெல்லாம் ஒளியானவருமான ஷண்முகப்பெருமான் ஆறுமுகங் களும், பன்னிருகரங்களுமுடைய உருவில் வணங்கப் படுகிறார். கந்த வழிபாடு தமிழ்நாடெங்கிலும்

பரவலாக இருக்கிறது. தமிழ்நாடெங்கிலும் ஷண்முகப்பெருமானுக்குக் கோயில்களிருக்கின்றன. மனதைக் கவரும் இயற்கை எழில் நிறைந்த இடங்களில் எல்லாம் இறைவன் சுப்ரமணியன் வடிவில் எழுந்தருளியிருக்கிறார். சுப்ரமணியருடைய கோயில்கள் உள்ள இடங்களில் சில மிகப் பிரசித்தமானவை. அந்தந்த கோயிலுக்குரிய கதையும் வரலாறு மிருக்கிறது.

மிகவும் சிறப்பான கோயில்கள் தமிழ்மறை நூல்களில் விவரிக்கப்பட்டுள்ளன. அவைகள் திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், பழனி, சுவாமி மலை, திருத்தணி, பழமுதிர்சோலை (அழகர் கோயில்) என்பவையாகும்.

## 1. திருப்பரங்குன்றம்

திருப்பரங்குன்றம் என்னும் தலம் மதுரையிலிருந்து திருவனந்தபுரம் சாலையில் மதுரை நகரிலிருந்து நான்கு மைல் தூரத்திலிருக்கிறது. கோயில் ஒரு குன்றின்மேல் கட்டப்பட்டுள்ளது. அந்தக் கோயிலைப் பற்றிப் புராணங்களிலிருந்து கீழ்க்கண்ட வரலாற்றை அறிந்துகொள்ளலாம்.

சூரபத்மனும் மற்ற அசுரர்களும் மடிந்த பிறகு, கந்தப்பெருமானும் தேவர்களும் திருச்செந்தூரிலிருந்து திருப்பரங்குன்றத்துக்கு வந்தனர். அங்கு, இந்திரனுடைய வேண்டுகோளுக்கிணங்க, பெருமான் தெய்வயானையை மணந்துகொண்டார். இங்குதான் மீன்களின் உருவமுடன் இருந்த பராசர முனிவரின் ஆறு புதல்வர்களும் சாபத்திலிருந்து மீண்டனர். கந்தபெருமானின் அருளால் அவர்கள் மீண்டும் தங்கள் சுய உருவத்தைப் பெற்றனர்.

## 2. திருச்செந்தூர்

தென்னிந்தியாவின் கிழக்குக் கடற்கரையில் திருநெல்வேலியிலிருந்து 35 மைல்கள் தூரத்தில் இருக்கிறது. கந்தப்பெருமான் தேவர்களுடைய சேனையுடன் வந்து இங்கு பாசறையை அமைத்துக் கொண்டார் என்று புராணங்களில் கூறப் பட்டுள்ளன. இங்கிருந்து சூரபத்மனின் தலை நகரான வீரமகேந்திரபுரிக்குத் தூதுவரான வீரபாகுத் தேவரை அனுப்பினார். சூரபத்மனைப் போரில் வென்ற பிறகு திருச்செந்தூருக்குத் திரும்பி வந்து தங்கியிருந்தார். கந்த ஷஷ்டித் திருவிழா இவ்வூரில் மிகவும் சிறப்புடன் கொண்டாடப்படு கிறது. ஆறு நாட்களும் கந்தனின் அடியவர்கள் இங்கு தங்கி கந்த ஷஷ்டி விரதத்தை ஆறு நாட் களும் மிகவும் நம்பிக்கையுடனும், உறுதியுடனும் மேற்கொள்ளுகிறார்கள்.

## 3. பழனிக்குன்று

அடுத்து பழனியில் முருகனின் திருக்கோயில் ஒரு குன்றின்மேல் சிறப்பாக அமைந்துள்ளது. தென்னிந்திய இருப்புப்பாதை வழியில் திருச்சிக்கும், மதுரைக்குமிடையே திண்டுக்கல் சந்திப்பிலிருந்து 20 மைல் தூரத்தில் உள்ளது பழனி என்ற ஊர். மலையின்மேலிருந்து பார்த்தாலே, இறைவனிடம் பக்தியுடனும், நம்பிக்கையுடனும் செல்லும் மனம் மேன்மை பெறும். புராணங்களில் இத்தலத்தின் வரலாறு கீழ்க்கண்டவாறு கூறப்பட்டுள்ளது.

கணேசரும், கந்தனும் தம் தாய் தந்தையருடன் கைலாயத்தில் ஒரு சமயம் இருந்தபோது, நாரத முனிவர் ஒரு பழத்தை எடுத்து வந்து, சிவபெரு மானுக்குக் கொடுத்தார். சிவபெருமான் தம்

இங்குள்ள இறைவனுக்கு சிவபெருமானின் குரு நாதன் என்று பொருள்படும்படி, 'சுவாமிநாதன்' அல்லது 'சிவகுருநாதன்' என்ற பெயர் ஏற்பட்டுள்ளது.

## 5. குன்றுதோறாடல்

மலைகளும், பள்ளத்தாக்குகளும் இயற்கைக் காட்சிகளால் நிறைந்து விளங்குவதால் அவற்றைக் காணும்போது மனித மனம் மகிழ்ச்சியடைவதோடு உணர்ச்சிவசப்படுகிறது. அங்குள்ள நிலப்பரப்புகள் மக்களால் பாதிக்கப்படாமல் இயற்கைக் காட்சி நிறைந்து விளங்குவதால் அமைதியான சூழ்நிலையையும் மன அமைதியையும் நாடி அங்கு செல்ல விரும்புகின்றோம். சுகாதாரச் சூழ்நிலைக்கும் பெரிதும் உதவுகின்றது. அப்படியிருக்கும்போது அவைகளைப் படைத்த இறைவனே அங்கு கோயில் கொண்டிருப்பதில் வியப்பில்லை. நீடித்த அழகுள்ள பொருள்கள் நிலைபெற்ற இன்பத்தைத் தருகின்றன. எனவேதான் நமது முன்னோர் மலையுச்சிகளில் கோயில்களை அமைத்துள்ளனர். திருத்தணிகை அவ்வாறு அமைந்த புகழ்பெற்ற ஒரு திருக்கோயில் ஆகும். சென்னை-ரேணிகுண்டா இருப்புப் பாதையில் சென்னைக்கு கிழக்கே ஏறக்குறைய 40 மைல் தூரத்திலுள்ளது. அசுரர்களுடன் போரிட்டு முடிந்தவுடன் தன் தேவியரான வள்ளி, தெய்வயானையுடன் அங்கே தங்கினார் என்று புராணங்கள் கூறுகின்றன. கோயில் ஒரு மலையின்மீது அழகான சூழ்நிலையில் அமைந்துள்ளது.

## 6. பழமுதிர்சோலை

மலைகளும், பள்ளத்தாக்குகளும் பலவிதமான மலர்க்கொடிகளால் அழகுற விளங்குமிடங்களில்

இயற்கை அன்னையும் அழகுடன் மிளிர்கிறாள். கந்தனை வழிபடுவது இயற்கையையும், நம்மைப் படைத்தவனாகிய இறைவனையும் வழிபடுவதாகையால் ஒவ்வொரு குன்றிலும், பள்ளத்தாக்கிலும் முருகன் கோயில் அமைந்துள்ளது. அந்தமாதிரியான இடங்களில் செங்கோட்டையிலிருந்து மூன்று மைலில் குற்றால அருவிக்கு அருகிலுள்ள 'இலஞ்சி' என்ற இடமும், மதுரைக்குக் கிழக்கே பத்து மைல் தூரத்திலுள்ள அழகர் கோயிலும் கந்தனை வழிபடுதற்குரிய சிறப்புடையவை ஆகும்.

## 7. அசலேசுவரர்

பஞ்சாபில் 'படாலா' என்னுமிடத்துக்கருகில் அசலேசுவரர் (முருகன்) கோயில் ஒன்றிருக்கிறது. தந்தையிடமிருந்து கனியைப் பெற வேண்டித் தன் மயிலின்மீது ஏறி உலகைச் சுற்றி வந்தபோது சிறிது இளைப்பாறுவதற்காக இறங்கி அங்கே தங்கி இருந்த போது, கணேசன் அக்கனியைப் பெற்றார் என்று கேள்விப்பட்டு, அங்கேயே நிரந்தரமாகத் தங்கி விட்டார் என்று சொல்லப்படுகிறது.

## 8. கதிர்காமம்

இலங்கையிலுள்ள யாழ்ப்பாணத்தில் கதிர்காமம் என்றோர் இடமிருக்கின்றது. அங்கு முருகக் கடவுளுக்கு ஓர் ஆலயம் இருக்கிறது. கந்த புராணத்தில் குறிக்கப்பட்டுள்ள ஏமகூடம் என்ற இடம்தான் அது எனப்படுகிறது. சூரபத்மனின் தலைநகரான வீரமகேந்திரபுரிக்கு வெளியே ஷண்முகப்பெருமான் தேவர்களின் சேனைகளோடு தங்கியிருந்த இடம்தான் ஏமகூடம். அங்குதான் சுப்ரமணியக் கடவுளின் உருவம் சிவபெருமானின் உருவத்தோடு 'ஜோதி' அல்லது ஒளிவடிவில் ஒன்றாகக் கலந்தது என்றும் சொல்லப்படுகிறது.

மற்றும் சென்னைக்கு 30 மைல் தூரத்தில் கடற்கரையிலுள்ள திருப்போரூர், திருச்சிக்கருகிலுள்ள வயலூர், திருவண்ணாமலை, மேற்குக் கடற்கரையிலுள்ள உடுப்பி என்பவையும் முருகக் கடவுளுக்குரிய சிறப்பான கோயில்களுள்ள இடங்களாகும்.

முருகக் கடவுளின் ஆசிகளை நீங்கள் அனைவரும் பெறுவீர்களாக.

---

## பாகம் — 6.

## சுவாமி சிவானந்தரின் கந்த சஷ்டிச் செய்திகள்:

## 1945

அமர ஆத்மாக்களான குழந்தைகளே!

இந்துக்களின் பண்டிகைகளும் விழாக்களும் நம் கண்முன் தோன்றும் காட்சிகளைவிட அதிக சிறப்புடையவை. மதங்கள் எல்லாவற்றுக்கும் தாயான இந்து மதம் ''காலிடாஸ்கோப்'' என்ற கருவியைப்போன்று பற்பல கோணங்களில் வெவ்வேறு அழகான காட்சிகளைத் தோற்றுவிக்கின்றது. ஆன்மீக உண்மைகளும், கருத்துக்களும் இலட்சியங்களும், உறுதியாகவும், எளிய முறையிலும், மனதைக் கவரும் வகையிலும், எல்லா மக்களுக்கும் அவரவர் மனப்பான்மைக்கேற்றபடி விரும்பும் வகையில் வெவ்வேறு கோணங்களில் ஆண், பெண் இருபாலாரும் விரும்பும் வகையில் எல்லோருக்கும் எவ்வித வேறுபாடின்றி எடுத்துக் கூறி அவைகள் மூலம் உணர்வூட்டுகின்றன.

நமக்குள்ளே மிகவும் வயது முதிர்ந்தவர்கூட இறைவனுக்குமுன்னே ஒரு சிறு குழந்தைதான். காலவரையறை இல்லாதவனும் ஆயிரக்கணக்கான

ஆண்டுகளை ஓர் இமைப்பொழுதாகக் கொண்டவனு மாகிய இறைவனுக்கு, ஒன்று அல்லது இரண்டு நூற்றாண்டுகள் ஒரு கணக்காகுமா? இருப்பினும் அவன் நம்மீது கொண்டுள்ள கருணைதான் என்னே? நம் வாழ்க்கையாகிய நாடகத்தில் நடைபெறும் ஒவ்வொரு நிகழ்ச்சியின் பின்னேயும் ஒரு ஆழ்ந்த கருத்து அல்லது நீதியை உணரும்படி அரிய உதவியைச் செய்து இயக்குகிறான். நாடக முடிவில் நாம் அமரநிலை பெறவும் உதவி அருளுகிறான். இந்தக் கருத்தை நம் புராணங்களின் தொடர் பாகவே சொல்லுகிறேன். அவைகளில் கூறப் பட்டுள்ள கதைகள் யாவும் உண்மையானவை. அவை சுவையாகவும், நம்மை மேன்மை பெறச் செய்பவைகளாகவும், உணர்வூட்டுபவை களாகவுமிருக்கின்றன. அவைகளிலுள்ள நீதிகளை உணர்ந்து, அவைகளால் நல்ல பயன்களை அடைய வும் உதவுகின்றன. அவைகளை உணர்வுடனும், ஊக்கத்துடனும், உற்சாகத்துடனும் நம்பிக்கை யுடனும் திறந்த மனத்தோடும் படியுங்கள். அப்படிச் செய்வது உங்களுக்குச் சம்சாரமாகிய பெருங்கடலைக் கடக்க உதவும்.

கந்த புராணம் சுப்பிரமணியக் கடவுளின் புகழ் மிக்க செயல்களைப்பற்றிக் கூறுகிறது. அசுரர் களோடு போர்செய்து வெல்லவேண்டிய வருந்தத் தக்க சூழ்நிலையில் இருந்த தேவர்களுக்கு உதவ வேண்டி சிவபெருமானே எடுத்த அவதாரம்தான் முருகக் கடவுள். தேவர்களுடைய சேனையின் தலைமைத் தளபதியாகப் பொறுப்பேற்று, தன்னுடைய வேலின் உதவியால் இறைவன் மிக எளிதாக அசுரர்களை வென்றார்.

ஒரு சாதகன் தன் ஆன்மீக வாழ்க்கையில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கணமும் எதிர்த்துப்

போராடி வெற்றபெற வேண்டிய அத்யாத்மிக சக்திகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது புராணங் களில் கூறப்பட்டுள்ள அசுரர்கள் அவ்வளவு வலிமையும், ஆற்றலும், படைத்தவர்களல்ல. இறைவன் உதவியை வேண்டி நிற்பவனும், அவன் தாமரைத்தாள்களேயே சரணுக அடைந்தவனும் காமம், கோபம், பேராசை ஆகியவற்றையும் அவற்ருேடு துணைநிற்கும் தீய பண்புகளேயும் வெல்வது உறுதி.

கந்தனுடைய அருளே நாம் எளிதில் பெற முடியும். ''உரிய மானப்பான்மை அல்லது மனே பாவத்துடன் 'முருகா' என்று ஒருமுறை கூறிஞல் கூடப் போதும்; இறைவன் நம்மீது தன் அருளேப் பொழிவான்'' என்று அருணகிரிநாதர் தம் திருப்புகழ் பாட்லில் கூறியுள்ளார். சாதகன் இறை வன் அருளேப் பெற்றவுடனேயே, அசுரசக்திகள் பறந்தோடிச் செல்கின்றன. உடனே சாதகனுக்கு அமரநிலே, பேரின்பம் ஆகியவை எளிதில் கிடைக் கின்றன.

பக்தியுடனும் ஆர்வத்துடனும் இறைவனே வணங்கிப் பாடு. வெகு விரைவில் சம்சாரமாகிய பெருங்கடலேக் கடந்து விடுவாய். இந்தக் கலியுகத் தில் சுப்ரமண்ணியர்தான் கண்கண்ட தெய்வம். அவனே வணங்கும் அடியவர்களுக்கு உடனே நன்மைகளேற்படும். இலட்சார்ச்சனே விழாவில் பங்கேற்பது அரிய வாய்ப்பு. இறைவனுடைய நாமங்கள் மிகவும் ஆற்றல் உள்ளவை. அவைகளேச் சொன்ஞலோ, அல்லது காதால் கேட்டாலோ, நாம் எண்ணற்ற பிறவிகளில் செய்த பாவங்கள் பறந்துபோகும்.

கந்தப்பெருமானின் ஆசிகளே அனேவரும் பெறுவீர்களாக!

**1946**

கந்த ஷஷ்டி என்பது கந்தப்பெருமான் அல்லது கார்த்திகேயப்பெருமானைக் குறித்து அனுஷ்டிக்கும் ஆறு நாள் விரதம் ஆகும். அவர் சிவபெருமானின் இரண்டாவது புதல்வராவார். தென்னிந்தியா விலும், இலங்கையிலுமுள்ள பெருவாரியான மக்கள் முருகப்பெருமானை மிகத் தீவிரமாக பக்தியுடன் வழிபடுகிறார்கள்.

கந்தனின் அவதாரம், அவதாரத்தின் நோக்கம் அதன் சிறப்பான உட்கருத்து ஆகியவை சத்தியத்தை நாடிப் பாடுபடும் சாதகர்களுக்கு முக்கியமானவை. அசுரர்களுக்கும், தேவர்களுக்கும் நடந்த போரில், தேவர்கள் பலமுறை தோல்வி அடைந்தார்கள். அசுரர்களின் தாக்குதலுக்கெதி ராக தேவர்களால் போராட முடியவில்லை. நம்பிக்கை இழந்தவர்களாய் சிவபெருமானை அணுகி ஓர் ஆற்றல்மிக்க தலைவரை அளித்து அவர் தலைமையின்கீழ் போரிட்டு அசுரரைப் போரில் வெல் வதற்குத் தங்களுக்குதவ வேண்டுமென்று அவரை வேண்டிக்கொண்டார்கள். அவரையே முழுதும் சரணக அடைந்து மிகவும் பணிவுடன் வேண்டிக் கொண்டனர் சிவபெருமானும் அவர்கள்மீது இரக்கம் கொண்டு, அவருடைய தெய்வீக சக்தியின் துணையால் 'கந்தன்' என்ற மிகவும் வல்லமை பொருந்திய தெய்வீக வீரர் ஒருவரைத் தந்தார். சிவபெருமானுடைய மகனை அந்த மகா வீரரும் தேவர்களின் சேனையின் தலைமைப் பதவியைப் ஏற்று, அவர்களை ஒன்று திரட்டி, அவர்களுக்கு ஊக்கமும், உற்சாகமுமூட்டி, அசுர சேனையைத் தாக்கினார். அசுரர் சிதறடிக்கப்பட்டு, தேவர் களுக்குப் பெருத்த வெற்றி ஏற்பட்டது. எனவே இறைவன் கந்தனுடைய திறமையான உதவி

யாலும், தலைமையின்கீழும்தான் தேவர்கள் அசுரர்களுக்கெதிராக வெற்றி பெற்றார்கள்.

ஆன்மீக சாதகனுடைய ஆன்மீக வாழ்க்கையும் அம்மாதிரியே ஒரு தேவாசுரப் போராட்டத்துக்கு ஒப்பானது. அவனுடைய நோக்கத்திலிருந்து அவனை இழுத்துத் தள்ள முயலும் அசுர சக்திகளுக்கு எதிராக அவன் உறுதியுடன் தீவிரமாக நடத்தும் போராட்டம்தான் அவன் சாதனையாகும். சில சமயங்களில் அவனுடைய கீழ்த்தரமான இயல்புகளால் அவன் தோல்வி அடைவது உறுதி என்ற நம்பிக்கை இழந்த நிலை காணப்படுகிறது. மீண்டும் மேலெழுந்து மீளமுடியாதபடி, வீழ்ச்சி அடைந்து விட்டதாக அவன் எண்ணிக்கொள்ளுகிறான். இறைவனுடைய பரிவும் அருளும் கிடைப்பது உறுதி என்று எல்லா சாதகர்களும் மனதில் உறுதி கொள்ள வேண்டும். அது ஒருபோதும் உன்னைக் கைவிடாது. மனம் தளருதல் கூடாது என்பது தான் உன் குறிக்கோளாக இருக்க வேண்டும். ஏனென்றால் ஒளிக்கு முன்னால் இருள் நிற்க முடியாது. இறைவனின் முன் மனப்பூர்வமான சரணாகதி அடைந்துவிடு. தேவர்கள் சிவபெருமானின் முன் அவ்வாறுதான் சரணடைந்து விட்டார்கள். அவர்களைப்போலவே உணர்ச்சியுடன் உண்மையாகப் பிரார்த்தனை செய். தெய்வத்துணை உறுதியாகக் கிடைத்து உன் உள்ளத்தில் தெய்வீக ஆற்றலாகிய ஊற்று பீரிட்டுக் கொண்டு வெளிப்படும். அது உனக்குள்ளே ஆன்மீக ஆற்றல் வடிவில் குடிகொள்ளும். இறைவன் கந்தன் உனக்குள்ளே வந்து உனக்குள்ளே இருக்கும் காமம், கோபம், பேராசை, பொறாமை, பொய்மை, வஞ்சகம், கொடுமை, ஆகிய கீழ்த்தரமான சக்திகளுக்கு எதிராக நீ செய்யும் போரில் உனக்கு உதவுவது இந்த முறையில்தான். நீ இனி

திக்கற்றவன் அல்ல! ஆன்மீக வலிமையுடன் இந்த தெய்வீக அருளைப் பெற்ற கந்த சக்தியின் உதவியால் ஆன்மீகப் பாதையிலுள்ள தீய சக்திகளை எதிர்த்து வென்று, போற்றத்தக்க முறையில் வெற்றி பெறுவீர்கள். உங்கள் வாழ்க்கையின் இலட்சியமும் நிறைவேறும்.

எனவே கார்த்திகேயப்பெருமான் உண்மையில் தெய்வீக அருளே வடிவானவர். அவர் இறைவனின் ''தயா சக்தி அல்லது கிருபா சக்தி'' (கருணை ஆற்றல்) யின் உருவம். இரக்கமுள்ள அந்த இறைவனை, வணக்கமாகவும் உண்மையாகவும் வழிபட்டால், அந்த எதிர்க்கமுடியாத தெய்வீக ஆற்றல் ஒன்று உருவாகி, உனக்குள்ளேயுள்ள அசுர சக்திகள் தெய்வீக சக்திக்குப் பயந்து அது தம் அருகில் வந்தவுடனேயே, பறந்தோடிவிடும். ஒவ்வொருவருடைய ஆன்மீக வாழ்விலும் உள்ளே நடக்கும் எல்லாவகையான ஆன்மீகப் போராட்டங்களுக்கும் தவறாமல் உதவுவதும், இறுதியான துணையும் இறைவன் அருளைத்தவிர வேறில்லை. கந்தனின் அவதாரமே சரணாகதி, உண்மையான பிரார்த்தனையின் மேலான ஆற்றல், இறைவனின் தவறாத பரிவு ஆகியவைகளையே வலியுறுத்துகிறது. நீ உண்மையாக தக்க மனோபாவத்துடன் இறைவனைச் சரண் அடைந்தால், அவர் உடனே தன் அருளை உன்மீது பொழிவது திண்ணம். உன் உள்ளத்தின் ஆழத்திலிருந்து வெளிப்படும் எந்தப் பிரார்த்தனைக்கும் நல்ல பலன் உனக்குக் கிட்டாமல் போகாது. இறைவனின் அருளைப் பெற்றால், உனக்கெதிராக நிற்கும் எல்லாவிதமான இடையூறுகளையும் தீய சக்திகளையும் வெற்றிகொள்வது உறுதி. தெய்வீக அருளாகிய மிகவுயர்ந்த ஆற்றலை எந்த சக்தியாலும் எதிர்த்துநிற்க முடியாது.

இறைவன் திருவடிகளையே சரணடைந்துவிடு. அவனிடம் உருக்கமாகப் பிரார்த்தனை செய். அவனது துணையை நாடு. அவன் அருளையும் இரக்கத்தையும் பெறு. வெற்றிக்களிப்புடன் வெளிப்படு. மிகவுயர்ந்த, போற்றத்தக்க ஆன்மீக நிலையாகிய, விடுதலை, பூரணநிலை, பேரின்பநிலை ஆகியவைகளைப் பெறு.

கந்த ஷஷ்டி நாளான இன்று வலிமைமிக்க அசுரர் தலைவனான தாரகாசுரனைவென்று இறைவன்பெற்ற வெற்றியை நீங்கள் கொண்டாடிக்கொண்டிருக்கும் சமயம், "மன உறுதியுடன் இருந்து இறைவனுடைய திருவடிகளில் மீண்டும் சரணடைவோம்'' என்ற தீர்மானத்தை நினைவூட்டிக்கொள்ளுங்கள்.

போற்றற்குரிய கந்தபிரான் உங்களுக்கு உணர்வூட்டி உங்களுக்கு ஆன்மீக வலிமையை அளிப்பானாக! அறியாமை, உலகியல் மனப்பான்மை ஆகிய அசுர சக்திகளுக்கு எதிரான போரில் அவன் தலைமை வகித்து உங்களை வெற்றிபெறச் செய்வானாக!

எல்லோருக்கும் அவன் ஆசிகள் கிட்டட்டும்!

## 1947

அன்புள்ள ஆத்மாக்களே,

பாலசுப்பிரமணியரையும், அவருடைய சக்தி வேலையும் பிரதிஷ்டை செய்யும் இந்த நந்நாளில் இந்தச் செய்தியை உங்களுக்கு அனுப்புவதில் அளவு கடந்த மகிழ்ச்சியை அடைகிறேன்.

''முருகா! உன் நாமத்தை ஒருக்கால் சொன்னாலும் உனதருள் பன்மடங்கு பெருகி எனக்குக்

கிடைக்கிறது. பரமகுமரா! உன் பெயரை ஒரு முறை நான் சொல்கிறேன். உன் அருள் எனக்குக் கிட்டட்டும்'' என்று அருணகிரிநாதர் தாம் இயற்றியுள்ள திருப்புகழில் பாடுகிருர். இம்மாதிரிபாட அவருக்கேற்பட்ட உணர்ச்சியையும் மனேபாவத்தையும் எண்ணிப்பாருங்கள். இறைவன் உங்கள் உள்ளத்தைத்தான் வேண்டுகிருன். அவனிடம் உங்கள் உள்ளத்தைக் கொடுத்துவிடுங்கள். அவனிடத்தில் அளவுகடந்த அன்பைச் செலுத்துங்கள். அவன் தரிசனத்துக்காக ஏக்கம் கொள்ளுங்கள். நீங்கள் அவனை அடைவது உறுதி.

சுப்பிரமணியர் சிவபெருமானின் அவதாரம். அவதாரங்கள் எல்லாம் இறைவனுடைய தோற்றங்களே. தருமத்தை நிலை நாட்டவும், தீயவற்றைக் கண்டிக்கவும் பகவான் அவ்வப்போது வெவ்வேறு உருவங்களுடனும் பெயர்களுடனும் அவதாரம் செய்கிருர். கலியுகத்தில் முருகப்பெருமான்தான், கண்கண்ட தெய்வம். அவர் தேவியரான வள்ளியும், தெய்வயானையும், இச்சா சக்தியையும், கிரியா சக்தியையும் குறிக்கிருர்கள். அவருடைய வேலாயுதம் ஞான சக்தியைக் குறிக்கின்றது. அவருடைய ஆறுமுகங்களும் ஞானம், வைராக்கியம், வலிமை, கீர்த்தி, அழகு, செல்வம் ஆகிய ஆறு பண்புகளையும் குறிக்கின்றன. அவைகள் அவன் எங்கும் நிறைந்த விராட் புருஷன் என்பதைக் குறிக்கின்றன.

பிரம்மபுராணம், பத்மபுராணம், விஷ்ணு புராணம், சிவபுராணம், பவிஷ்ய புராணம், பாகவதபுராணம், மார்க்கண்டேய புராணம், நாரதீயபுராணம், பிரம்மவைவர்த்த புராணம், அக்னிபுராணம், வராகபுராணம், புராணம், இலிங்கபுராணம்,

கந்தபுராணம், வாமனபுராணம், கூர்மபுராணம், மச்சபுராணம், கருடபுராணம், பிரம்மாண்ட புராணம் என்று வியாச பகவான் தொகுத்த பதினெண் புராணங்களில், கந்த புராணத்தில் மட்டும் கந்தரின் அவதாரத்தைப் பற்றியும், அவருடைய திருவிளையாடல்களைப் பற்றியும் கூறப் பட்டுள்ளது. திருச்செந்தூர், பழனி, திருப்பரங் குன்றம், சுவாமிமலை, திருத்தணிகை, திருப் போரூர், உடுப்பி, அழகர் கோயில் முதலிய இடங் களில் முருகனுக்குக் கோயில்கள் இருக்கின்றன. அநேகமாகத் தென்னாட்டிலுள்ள குன்றுகளின் உச்சிகளில் எல்லாம் முருகனுக்கு கோயில்கள் கட்டப்பட்டுள்ளன.

நக்கீரர் என்ற பழம் பெரும் தமிழ்ப் புலவர் தமிழ்ச் சங்க காலத்தில் வாழ்ந்தவர். அவர் பெரும் முருக பக்தர். அவர் திருமுருகாற்றுப் படை என்னும் சிறந்த நூலைப் பாடியுள்ளார். அந்த நூல் முழுவதையும் பக்தியுடனும், பாவத்துடனும் பாராயணம் செய்பவர், அமைதியும், வளப்பமும், எடுத்த காரியம் அனைத்திலும் வெற்றியும் பெறுவர்.

ஸ்ரீ வைகுண்டத்தில் வாழ்ந்த குமரகுருபர சுவாமிகள் மற்றொரு முருக பக்தரும், அடியாரும் ஆவார். அவர் ஐந்து வயது வரையில் ஊமையாக இருந்தார். முருகனருளால் ஞானமும் கல்வியும் மற்ற ஆற்றல்களும்பெற்று, பின்னர் பெரும் ஞானியாக மாறினார். அவர் இயற்றியுள்ள கந்தர் கலிவெண்பாவும் மற்ற பல நூல்களும் முருகப்பெருமானின் அடியவர்களால் இன்றும் பாவத்துடனும் நம்பிக்கையுடனும் பாடப்பட்டு வருகின்றன.

திருப்புகழ், கந்தர் அலங்காரம், கந்தரனுபூதி போன்ற பாடல்களை அருணகிரிநாதர் என்ற அடியார் இயற்றியுள்ளார். அவை முருகனைப்பற்றி உணர்ச்சிவசப்படும் நிலையில் பாடப்பட்டுள்ளன. அவர் முருகப்பெருமானை நேரில் தரிசனம் செய்தார். ஒழுங்காகவும், தவருமலும் இப்பாடல்களைப்பாடி வந்தாலே, துன்பத்தில் தோய்ந்துள்ள ஆன்மாக்கள், ஆறுதலும், அமைதியும், வளமும் பெறுவதற்குப் போதுமானது.

இந்த ஞானிகளின் அடிச்சுவடுகளைப் பின்பற்றுங்கள். எளிய முறையில் வாழுங்கள். தூய்மையோடிருங்கள். பெருந்தன்மையைப் பெருக்கிக் கொள்ளுங்கள். அமைதியோடிருங்கள். பண்பை வளர்த்துக் கொள்ளுங்கள். அடியவர்களிடமிருந்து இறையுணர்வைப் பெறுங்கள். உயர்ந்த எண்ணங்களையே மனதிற் கொள்ளுங்கள். அறச் சிந்தனையோடு ஏழைகளிடம் அன்புடனிருங்கள். அடக்கமாயிருங்கள். இறைவனையே சரணுக அடையுங்கள். இறைவன் நாமங்களைப் பாடுங்கள். எல்லாருடைய உள்ளங்களிலும் அவரையே காணுங்கள். தீவிர அன்புடன் எல்லோருக்கும் தொண்டு செய்யுங்கள். தொண்டே வழிபாடு. தொண்டு செய்யுங்கள், அன்பு செய்யுங்கள், பிறருக்குக் கொடுங்கள், அமரநிலையாகிய அமுதத்தைப் பருகி மிகவுயர்ந்த அமைதியையும் பேரானந்தத்தையும் பெறுங்கள்.

இறைவன் இருக்கிறுன் என்ற எண்ணத்தை உடையவராக இருப்பதுதான் ஆன்மீகத் தெளிவை அடைவதற்குரிய மிகவும் எளிதானதும், மிகவும் அண்மையிலிருப்பதும், உறுதியானதுமான வழியாகும். அவனுக்குச் சமீபமாகச் செல்வதற்காகத் தான் நமக்கு ஒவ்வொரு நாளும் அளிக்கப்பட்டிருக்

கிறது. தனியே இருக்கும்போது தெய்வீக அன்பென்னும் ஆனந்தக் கண்ணீரைச் சொரிந்து மகிழ்வீர்களாக. வெறும் வெளிவேடம் வேண்டாம்.

அருணகிரிநாதர்போன்ற ஷண்முக பக்தர்களின் ஆசிகள் உங்களுக்குக் கிட்டட்டும்! நீங்கள் செய்யும் செயல்கள் எல்லாம் நிறைவேற இறைவன் துணை புரியட்டும்! அமைதி, வளமை, செல்வம், ஞானம் ஆகியவைகளைப்பெற அவருடைய வேல் உங்களுக்கு வழிகாட்டட்டும்!

---

## முருகன் நாமாவளி

சரவணபவ சரவணபவ சரவணபவ பாஹிமாம்

சுப்ரமண்ய சுப்ரமண்ய சுப்ரமண்ய ரக்ஷமாம்

வேல்முருகா வேல்முருகா வேல்முருகா பாஹிமாம்

வேலாயுதா வேலாயுதா வேலாயுதா ரக்ஷமாம்

கார்த்திகேய கார்த்திகேய கார்த்திகேய பாஹிமாம்

சுப்ரமண்ய சுப்ரமண்ய சுப்ரமண்ய ரக்ஷமாம்

வெற்றிவேல் முருகனுக்கு ஹரோஹரா!